# மாவிளக்கு

பெ. தூரன்



இன்ப நிலையம்

மயிலாப்பூர் :: சென்னை—4.

# முன்னுரை

இது சிறுகதை யுகம். எந்த மொழியை எடுத்துக் கொண்டாலும் அதில் வெளியாகின்ற இலக்கியப் பத்திரிகைகளில் சிறுகதை முக்கியமான இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

இவ்வாறு பெருமை பெற்றிருக்கும் சிறுகதை பல வேறு வகைகளில் வேகமாக வளர்ச்சியடைந்திருக்கிறது. சுமார் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் சிறுகதைக்கு ஒரு விதமான இலக்கணம் கூறுவார்கள். இன்று அந்த இலக்கணம் மாறுபட்டிருக்கிறது.

சிறிய கதையாக இருப்பதுதான் சிறுகதை என்ற எண்ணம் ஒரு காலத்தில் இருந்தது. சிறு கதை என்ற பெயரே அதற்குச் சான்று. இன்று அந்தக் கருத்து அப்படியே முழுமையாக ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. சிறு கதை ஒரே உணர்ச்சியை அல்லது உள்ளக் கிளர்ச்சியை அல்லது நிகழ்ச்சியைச் சுற்றிப்பின்னிக் கிடக்க வேண்டும் என்பது இன்றைய முக்கியமான கருத்து.

சிறு கதை அளவில் சிறியதாக இருக்க வேண்டும் என்பதில்லை. அது விவரிக்கும் உணர்ச்சியே பிரதானம். கதை மிக நீண்டிருக்கலாம். ஆனால், உணர்ச்சி ஒன்றாக இருந்தால் அது சிறுகதைதான் என்று கூறுகிறார்கள். புகழ் பெற்ற நார்வே நாட்டு ஆசிரியர் நட் ஹாம்சன் முன்னூறு பக்கங்களுக்கு மேல் உள்ள பல கதைகள் எழுதியுள்ளார். ஒரே உணர்ச்சியை மட்டும் கூறும் கதைகள் அவற்றிலே உண்டு. அவை சிறு கதை இலக்கணம் கொண்டவையாகவே கருதப் படுகின்றன.

இன்னும் ஒரு விஷயம். சிறு கதையிலே கதை ஒன்றும் இருக்க வேண்டியதில்லை. சம்பவங்களே இல்லாமல் உணர்ச்சியை மட்டும் விவரிக்கும் உயர்ந்த சிறுகதைகள் உண்டு. உள்ளத்தில் எத்தனையோ கிளர்ச்சிகள் குமுறுகின்றன. அவற்றில் ஒன்றை மட்டும் எடுத்துக்கொண்டு அதிலே ஒரு குறிப்பிட்ட மின்னல் போன்ற பகுதியை விளக்கினால் அதுவும் சிறுகதைதான்.

ஆகவே, சிறு கதை சிறியதாக இருக்க வேண்டும் என்பதில்லை; அதில் கதை வேண்டும் என்பதும் இல்லை. அளவில் குறுகியும் கதையைத் தன்னகத்தே கொண்டதுமாகச் சிறு கதை இருக்கலாம்; ஆனால், அளவும் கதையம்சமுமே சிறு கதை இலக்கணமல்ல.

சிறுகதைத் தொகுதிக்கு முகவுரை எதற்கு? தேவையில்லை என்பது என் கருத்து. கதைகளைப் படிப்போர் அனைவரும் முகவுரையைப் படிப்பார்கள் என்றும் நான் எதிர்பார்க்கவில்லை. நூலைப் படித்து முடித்த பிறகு நான் சில சமயங்களிலே முகவுரையைப் படிப்பதுண்டு. அவ்வாறு படிப்பதில் மிகுதியான பயன் அடைந்திருக்கிறேன்.

'மாவிளக்கு' என்ற தலைப்புக் கொண்ட இந்நூல் எனது ஐந்தாவது சிறு கதைத் தொகுப்பு. இதை வெளியிடுகின்ற மகிழ்ச்சியிலே சிறுகதையின் இக்காலப் போக்கைப் பற்றியும் இலக்கணத்தைப் பற்றியும் ஒற்றிரண்டு எண்ணங்களைக் குறிப்பாக உங்களுக்கு நினைவுபடுத்தலாம் என்று தோன்றியது. அதுவே இம்முகவுரைக்கு அடிப்படை. கதைகளைப் படித்த பிறகாவது இதிலும் ஒரு பார்வை செலுத்துங்கள். வணக்கம்.

பெ. தூரன்

# பழிக்குப் பழி

"இருந்தாலும் உனக்கு இத்தனை ஆத்திரமாகாது. எப்படியும் நாளைக்கு உன்னை விடுதலை செய்யத்தான் போகிறார்கள். அதற்குள்ளே ஏன் இப்படிப் பறக்கிறாய்?"

"நீங்கள் இப்படித்தான் சொல்லுவீங்க. ஒரு குற்றமும் செய்யாமல் ஆறு வருசம் ஜெயிலில் இருந்திருந்தால் அப்போ தெரியும் உங்களுக்கு. என் மனசு வேகறதை உங்களுக்கு இப்போ எப்படித் தெரியும்?"

"ஆமாம், நீ சொல்லுவது மெய்தான், முத்துசாமி. நான் குற்றம் செய்துவிட்டு ஜெயிலுக்கு வந்தவன்தான். உன்னைப் போல் வரவில்லை. அதனால் உன்னுடைய மனக்கொதிப்பு எனக்குத் தெரியாதுதான்" என்று அந்தக் கிழவன் கொஞ்சம் வருத்தமடைந்தவன் போல் பேசினான். அவன் தன் மனைவியைக் கொலை செய்த

குற்றத்திற்காக ஆயுள் தண்டனை அனுபவித்துக் கொண்டிருக்கிறான்.

முத்துசாமி கிழவனைக் குத்திக் காண்பிக்க நினைக்க வில்லை. தான் நிரபராதி என்பதை வற்புறுத்தவே எண்ணினான். இருப்பினும் எதிர்பாராத விதமாக அவனுடைய பேச்சு கிழவன் உள்ளத்திலே சுருக்கென்று தைத்ததைக் கண்டு, "தாத்தா, நான் சொன்னது தப்பு. உங்களைக் குறிப்பிட்டு நான் பேச நினைக்கவில்லை" என்று தாழ்ந்த குரலில் சொன்னான். கிழவனிடத்திலே உண்மையாகவே அவனுக்கு மரியாதை ஏற்பட்டிருந்தது. ஒரே சிறையில் அவர்கள் இருவரும் தற்செயலாக அடைப்பட்டுக் கிடந்ததால் இருவருக்குமிடையே தொடர்பு ஏற்பட்டதென்றாலும் அது எப்படியோ வேரூன்றிக் கொண்டது. கிழவன் தன் மனைவியோடு சரியான முறையில் குடும்பம் நடத்தியிருந்தால் இப்படி ஒரு பேரனோடு வாழ்ந்திருப்பான். இப்பொழுது அவனுடைய கற்பனையில் முத்துசாமி பேரனாகத் தோன்றினான்.

கிழவன் சிரித்தான். "பார்த்தாயா, முத்து, இப்படித்தான் ஆத்திரமாக அன்றைக்கும் எதையாவது சொல்லியிருப்பாய். அதனால்தான் ஜெயிலுக்கு வர வேண்டிய சங்கடம் ஏற்பட்டிருக்கிறது."

"இல்லை தாத்தா, நான் ஒரு குற்றமும் பண்ண வில்லை. வேணுமென்று அந்த வேலுச்சாமிக் கவுண்டன் என்னை அந்த அடிதடி வழக்கில் சேர்த்து வைத்து விட்டான். நான் ஒரு பாவமும் செய்யவில்லை. அடிதடி நடந்தபோது நான் பக்கத்தில்கூட இருக்கவில்லை."

" இதைத்தான் என்னிடத்திலே ஆயிரந்தடவை சொல்லியிருக்கிருயே ?"

" அப்படி யிருந்தும் உங்களுக்கு இன்னும் நம்பிக்கை ஏற்படவில்லை."

" அடடே, மறுபடியும் உனக்கு இதே சந்தேகமா ? நீ குற்றம் செய்திருக்கமாட்டாய் என்றுதான் நான் முழுக்க முழுக்க நம்புகிறேன். ஆனல் எப்படியோ தண்டனை கிடைத்துவிட்டது; அதை நீ அனுபவித்தும் ஆகிவிட்டது. இப்போ வெளியிலே போகிற சமயத்திலே இப்படி ஆத்திரப்பட வேண்டாமென்றுதான் நான் சொல்லுகிறேன். ஜெயிலுக்குள்ளேகூட நீ கொஞ்சம் நிதானமாக இங்குள்ள சிப்பந்திகளோடு நடந்துகொண்டிருந்தால் ஆறு மாசத்துக்கு முன்னமேயே வெளியில் போயிருக்கலாம். நல்ல நடத்தைக்காகத் தண்டனை குறைந்திருக்கும்."

" அப்படிக் குறைய வேண்டிய அவசியமில்லை தாத்தா. என் குடும்பம் கெட்டதே கெட்டது. ஆறு மாசம் முன்னுலே போயிருந்தால் அதைக் காப்பாத்த முடியவா போகுது? ஐந்தாறு வருசமாகத் திக்கில்லாமல் கிடக்கிற குடும்பம் ஆறு மாசத்து முன்னுலே போயிருந்தால் மட்டும் வாழவா முடியும்?"

கிழவன் சற்று நேரம் யோசித்துவிட்டு மீண்டும் பேசத் தொடங்கினுன்.

" முத்து, நாளைக்கு வெளியிலே போய் என்ன செய்யப் போகிருய் ?"

" இருட்டோடு இருட்டாக ஊருக்குப் போய்ச் சேர்ந்து முதல் வேலையாக அந்த வேலாங்காட்டுக்

கறுப்பண்ணசாமியைப் பிடுங்கி உடைத்தெறியப் போகிறேன்.”

“என்ன முத்து, பனைமரத்திலே தேள் கடிக்கத் தென்னை மரத்திலே நெறியேறுதே? கறுப்பண்ணசாமி என்ன செய்தார்?” என்று சிரித்துக்கொண்டே கிழவன் கேட்டான்.

“அந்தச் சாமியை நான் அந்தக் காலத்திலே கும்பிடாத நாளில்லை. அதை நினைக்காத நேரமில்லை. அப்படி இருந்த எனக்கு இப்படி நேர்ந்ததே? அப்போ அது சாமியா? அதற்குக் கண்ணிருக்குதா?”

கிழவன் மறுபடியும் சிரித்தான்.

“என்ன தாத்தா. உங்களுக்கு இதெல்லாம் சிரிப்பா யிருக்குதா?”

கிழவன் சிரிப்பை அடக்கிக் கொண்டான். “சரி யப்பா, சாமியை உடைப்பது ரொம்ப சுலபம். சாமி உன்னைத் தடுக்கவா போகுது? நீ கும்பிட்டாலும் சும்மா இருக்கும்; கல்லைத் தூக்கிப் போட்டாலும் சும்மாதான் இருக்கும். அதன் சங்கதியே நமக்கு விளங்காது. சரி, அப்புறம் என்ன செய்யப் போகிறாய்?”

முத்துசாமிக்குக் கிழவன் பேச்சு எரிச்சலை உண்டு பண்ணியது. “அப்புறமா? அந்த வேலுச்சாமிக் கவுண்டனை நாளைக்கு ராத்திரியே பலி வாங்கிவிட்டு உங்களைப்போலவே இங்கே வரப் போகிறேன்.”

“இந்தத் தீர்மானத்தை மாற்றவே மாட்டாயா, முத்து?”

“தாத்தா, நீங்கள் ஆயிரந்தடவை என்னிடம் இப்படிக் கேட்டாகிவிட்டது. நானும் திருப்பித் திருப்பிப்

பதில் சொல்லியாகிவிட்டது. இந்தத் தீர்மானத்தை மாத்திரம் நான் மாற்றவே மாட்டேன்."

இதைக் கேட்டுக் கிழவன் கவலையடைந்தான்.

"முத்து, நான் சொல்லுவதைக் காதிலே வாங்கிக் கொண்டு கொஞ்சம் யோசனை செய்து பார். நீதான் ஒரே தீர்மானமாக இருக்கிறாய். அப்படியிருக்கிறபோது எதற்கு அவசரம்? நிதானமாக சமயம் பார்த்துக் காரியம் செய்யப்படாதா? உன்னுடைய குடும்பத்தை நினைத்தாவது நீ மறுபடியும் கேசிலே மாட்டிக் கொள்ளப்படாது. அதுதான் என்னுடைய ஆசை." இப்படிச் சொல்லும்போது கிழவனுக்கு முத்துசாமியிடத்தில் ஏற்பட்டிருந்த அன்பு தெளிவாக வெளியாயிற்று.

"அதைப்பற்றிக் கவலையே வேண்டாம் தாத்தா. சிக்கிக்கொள்ளாமல் பழி வாங்க நான் திட்டம் போட்டிருக்கிறேன். ஆறு வருசமாக ஜெயிலில் எத்தனையோ பேரிடம் பழகிய பிறகு இதுகூடவா எனக்குத் தெரியாது?"

"முத்து, நான் என்னமோ கிழவன் சொல்லறதாக நினைக்காதே. நானும் உன்னைப்போல ஆத்திரப்பட்டுத்தான் இங்கே வந்திருக்கிறேன். என் வீட்டுக்காரி ஒரு நாள் என்னிடம் கொஞ்சம் கூடக்கூட எதிர்த்துப் பேசிவிட்டாள். அதைப் பொறுக்கமுடியாமல் போன குற்றத்துக்கு நான் அனுபவிக்கிறது உனக்குத் தெரியாதா? இப்போ நான் சொல்லுவதெல்லாம் உன்னுடைய இஷ்ட தெய்வம் கறுப்பண்ணசாமி சொல்லுவதாகவே நீ நினைத்துக்கொள்."

“ கறுப்பண்ணசாமியா ? அந்த சாமியைப்பற்றி என்னிடம் பேச வேண்டாம், தாத்தா. அது வெறுங் கல்லு.”

கிழவன் கொஞ்சம் தயங்கினுன். முத்துசாமிக்கு மனசிலே படும்படி வேறு எப்படிச் சொல்லாம் என்று யோசித்தான்.

“ முத்து, சாமியைப் பற்றிக் கூட நினைக்க வேண்டாம். உன் பையனை நினைத்துப் பார். அவனுக்காகவாவது நீ மறுபடியும் ஜெயிலுக்கு வரப்படாது.”

“ பையனு ? அவனைப் பற்றி இப்போ நினைத்து என்ன பிரயோசனம் ? எனக்கு தண்டனை கிடைத்த போது அவனுக்கு ஆறு வயசு. இப்போ அவன் எப்படி இருக்கிருனே ? நான்தான் படிக்காத காட்டு முட்டாளாகப் போய்விட்டேன். அவனையாவது படிக்க வைக்க வேணுமென்று ஒரே ஆசையாக இருந்தேன். அதெல்லாம் போச்சு. என் குடும்பம் தொலைந்தது. அவள் இப்போ எப்படி இருக்கிருளோ ? வயசான என் தகப்பனுர் என்ன கஸ்டப்படுகிருரோ ? நான் ஒருத்தன் கூலி வேலை செய்துதான் அத்தனை பேரும் காலம் தள்ளினுர்கள்.”

இப்படிக் கூறும்போதே முத்துசாமியின் கண்கள் இரத்தம் போலச் சிவந்தன. தந்தை உயிரோடிருக்கிருரா என்றுகூட அவனுக்குத் தெரியாது. மனைவியைப் பார்த்து ஆறு வருஷங்களாகிவிட்டன. அவள் இப்போது என்ன கஷ்டப்படுகிருளோ ? அவள் கூலி வேலை செய்து சம்பாதித்தால்தான் அந்த மூன்று ஜீவன்களுக்கும் சோறு கிடைக்கும். ஜெயிலுக்குள்ளே

நுழைகிறபோது விம்மி விம்மி மனைவி அழுதாளே அந்த உருவத்தைத்தான் அவன் அடிக்கடி கற்பனை செய்து கொள்வான். அவளை நினைக்கிறபோதெல்லாம் முத்து சாமியின் உள்ளம் குமுறும். அவளோடு தன்னை வாழ விடாமல் ஜெயிலுக்கோட்டிய வேலுச்சாமிக் கவுண்டரின் மேல் கோபம் பொங்கியெழும். பழி வாங்க வேண்டும் என்ற ஆத்திரம் கொந்தளிக்கும்.

முத்துசாமி தன் குடும்பத்தைப்பற்றி நினைத்துக் கொண்டு உள்ளுக்குள்ளே குமுறும்போது கிழவன் பேசமாட்டான். அந்தச் சமயத்திலே பேசினால் முத்து சாமியின் கோபம் அதிகமாகுமென்று அவனுக்குத் தெரியும். பலமுறை ஏற்பட்ட அனுபவத்தால் தெரிந்த விஷயம் அது. அவன் மௌனம் சாதித்தான்.

அதற்குமேல் அவர்கள் இருவரும் தனித்துப் பேச சமயம் வாய்க்கவில்லை.

முத்துசாமியை மறுநாள் விடுதலை செய்து விட்டார்கள். இரவு பதினொரு மணிக்கு மேல் எல்லோரும் உறங்கும் நேரத்திலே தன் சொந்த ஊரான காட்டுப்பாளையம் போய்ச் சேரவேண்டும் என்பது அவனுடைய உத்தேசம். யார் கண்ணிலும் படாமல் அவன் தன் தீர்மானத்தை நிறைவேற்ற எண்ணி யிருந்தான். அதற்கு ஏற்றமாதிரி கோயம்புத்தூரி லிருந்து ஒரு ரயிலில் ஏறி இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் ஊர் போய்ச் சேர்ந்தான்.

முத்துசாமி நேராக வீட்டுக்குப் போகவில்லை. வேலாங்காட்டுக்குத்தான் முதலில் போனான். வேலா மரம் நிறைய இருந்ததால் அதற்கு வேலாங்காடு என்று

பெயர். மரக் கூட்டத்தால் அங்கே ஒரே இருட்டாக இருந்தது. அதிலே ஒரு பக்கத்தில் கறுப்பண்ணசாமி கோயிலிருந்தது. இரவிலே அங்கு யாரும் இருக்க மாட்டார்கள். கறுப்பண்ணசாமி கோயிலைப் பூட்டி வைப்பது கிடையாது. பூட்டி வைத்திருந்தாலும் முத்து சாமி பூட்டை உடைக்கத் தயங்கியிருக்கமாட்டான்.

அவன் கோயிலுக்குள்ளே புகுந்தான். கறுப் பண்ண சாமியின் சிலையை ஆத்திரத்தோடு அசைத்துப் பிடுங்கினான். அந்தி சந்தி அனவரதமும் கும்பிட்ட அந்தச் சிலையைப் பலிபீடத்தின் மேலேயே போட்டு நூறு சுக்கலாக உடைத்தான். தனது எண்ணங்களில் ஒன்று நிறைவேறிவிட்டது என்று மகிழ்ச்சியடைந்தான். அடுத்த எண்ணத்தையும் நிறைவேற்றிவிட வேண்டு மென்று அங்கேயே காத்திருக்கலானான்.

முத்துசாமிக்குக் கறுப்பண்ணனிடத்திலே எத்தனை பக்தியிருந்ததோ அத்தனை பக்தி வேலுச்சாமிக் கவுண்ட ருக்கும் உண்டு. அவர் தினமும் அதிகாலையில் எழுந்து தமது பண்ணையைக் கவனிப்பதற்கு முன்பு கறுப்பண்ண சாமி கோவிலுக்கு வந்து கும்பிட்டுப் போவார். இருட்டோடே அவர் அங்கு வருவது பலருக்குத் தெரியா தென்றாலும் முத்துசாமிக்குத் தெரியும். அவர் பண்ணையில் அவன் பல நாள் கூலி வேலை செய்திருக் கிறான். அதனால் அவர் வருகையை எதிர்பார்த்திருந்தான்.

வேலுச்சாமிக் கவுண்டர்தான் காட்டுப்பாளை யத்தில் பெரிய பண்ணைக்காரரார். ரொக்கமும் பூஸ்திதியும் நிறைய உடையவர். நல்ல செல்வாக்கும் அதிகாரமும் அவருக்குண்டு. அவருடைய பேச்சுக்கு அட்டி சொல்லு

கிறவர் யாரும் காட்டுப்பாளையத்தில் கிடையாது. அவர் வைத்ததுதான் சட்டம். அதை யாரும் மீறி நடக்க மாட்டார்கள். அவ்வளவு செல்வாக்கியிருந்தாலும் அவர் கொடுங்கோல் நடத்தவில்லை. எவனுவது தம்மை மீறப் பார்க்கிருனென்ருல் விடமாட்டார். மற்றபடி எல்லோரிடமும் அனுதாபத்தோடுதான் நடப்பார். அவருக்குப் பணிந்துகொண்டு போகிறவர்களுக்கு நல்ல சலுகைகளும் கிடைக்கும். "நீங்கள்தான் ராஜா" என்று சொல்லி விட்டால் போதும் அவருக்கு; என்ன உதவியும் செய்ய முன் வருவார். அதிகாரத்திலே அத்தனை ஆசையுடையவர்.

அவர் வீட்டிலே இரவும் பகலும் பத்துப் பதினைந்து பேர் காத்துக் கிடப்பார்கள். எதிரிகளுடைய பயமில்லையென்ருலும் தோரணைக்காக ஆட்கள் இருப்பார்கள்.

ஆறு வருஷங்களுக்கு முன்னே பக்கத்தூர் வாசிகளோடு பூமி விஷயமாக ஒரு கலவரம் ஏற்பட்டது. அதிலே வேலுச்சாமிக் கவுண்டர் முழு வெற்றியடைந்து விட்டார். நியாயம் அவர் பக்கத்திலே இருந்ததாகச் சொல்ல முடியாது. ஆனுல், அவருடைய பணம் காரியத்தைச் சாதித்தது. அவரிடம் வாலாட்ட நினைத்த எல்லோரையும் அந்தக் கலவரத்தை யொட்டிய வழக்கிலே சிக்க வைத்து ஜெயிலுக்கு ஓட்டிவிட்டார். அதற்குப் பிறகு அவர் கிழித்த கோட்டைத் தாண்டிப் போகிறவர்கள் யாருமே இருக்கவில்லை.

முத்துசாமி காட்டுப்பாளையத்தில் ஒரு சாதாரணக் கூலிக்காரன். அவன் நல்லவன்தான். அவனிடத்திலே யாரும் எவ்விதக் குறைபாடும் காண முடியாது. ஆனுல்,

நல்லவனாக மட்டும் இருந்தால் கிராமத்திலே போதுமா? கையிளைத்தவனாக இருக்கும் போது செல்வருக்குப் பணிந்து நடந்து கொள்ளவும் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படிப் பணிந்து நடக்கிற சுபாவம் மட்டும் அவனிடம் கிடையாது. "கஸ்டப்பட்டு வேலை செய்தால் கூலி கிடைக்கிறது. ஒருத்தனுடைய தயவு எதுக்கு வேணும்?" என்பது அவனுடைய எண்ணம். யாராவது உயர்வுத் தோரணையோடு பேசினால் அவனால் பொறுக்க முடியாது. ஒரு நாள் அவன் வேலுச்சாமிக் கவுண்டருக்கு முன்னாலே ஏதோ துடுக்காகப் பேசி விட்டான். விஷயம் ஒன்றும் பெரியதில்லை. சாதாரண மாகத் தினமும் கிராமத்திலே பேசப்படுகிற விஷயந் தான். இருந்தாலும் கவுண்டருக்கு முன்னாலே அப்படிப் பேச முடியுமா? அதை மனதிலேயே வைத்துக் கொண் டிருந்து வேலுச்சாமிக் கவுண்டர் அவனையும் பக்கத்தூர் கலவர வழக்கிலே எதிரியாக சம்பந்தப்படுத்திவிட்டார். தமக்குப் பணிந்து நடக்கத் தெரியாதவனுக்குக் கொஞ்சம் பாடம் கற்பிக்கவேண்டும் என்பதுதான் அவருக்கு எண்ணம். ஆனால், முத்துசாமிக்கு ஆறு வருஷம் ஜெயில் கிடைக்குமென்று அவர் எதிர்பார்க்க வில்லை. நீதிமன்றத்திலே அவன் நடந்து கொண்ட முறையும் பேசிய பேச்சும் அவனுக்குப் பாதகமாய் நின்றன.

"பணந்தானே ஜெயித்தது? நீதியா நடந்தது? அன்றைக்கு இந்த வேலுச்சாமிக்கவுண்டன் தன் பணத்தி னலல்லவா என்னைச் சிக்க வைத்துவிட்டான். இப்போ அவன் வரட்டும். அவன் பணம் என்ன செய்யும் என் பதை நான் பார்க்கிறேன்" என்று கருவிக்கொண்டே

முத்துசாமி கோயிலுக்கு முன்னால் ஒரு பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். அவன் கையில் கறுப்பண்ணசாமியின் தலை இருந்தது. அந்தத் தலையையே வேலுச்சாமிக் கவுண்டரின் தலையில் போட்டு உடைக்க வேண்டும் என்பது அவனுடைய நோக்கம்.

வேலுச்சாமிக் கவுண்டர் காலையில் ஏறக்குறைய ஐந்து மணிக்குத்தான் கோயிலுக்கு வருவார். அதுவரை நிதானமாக ஓரிடத்தில் அமர்ந்திருக்க எவ்வளவோ அவகாசம் இருந்தது. ஆனால், முத்துசாமி உட்காரக் கூட நினைக்கவில்லை. அவன் உள்ளத்திலே ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது. அதனால் அவன் வழிமேல் விழிவைத்து நின்றிருந்தான்.

ஆயிற்று; மணி ஐந்திருக்கும். கார்த்திகை மாசமாதலால் நல்ல குளிர். பனியும் பெய்தது. இருட்டும் குறையவில்லை. அந்த நேரத்தில் சற்று தூரத்தில் வருகின்றவரைக்கூடக் கண்டுகொள்ள முடியாது. அப்படி இருண்டிருப்பதும் முத்துசாமிக்கு ஒரு வகையில் சாதகமாக இருந்தது.

அவன் வேலுச்சாமிக் கவுண்டர் வழக்கமாக வரும் வழியையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். "அதோ, வந்துவிட்டானே; அந்தச் சிவப்புச் சால்வையைப் போர்த்துக்கொண்டு வருவதை இன்னும் அவன் விடவில்லையா? வரட்டும் வரட்டும்—அந்தச் சிவப்புச் சால்வைக்கு இன்னும் நல்ல சிவப்புச் சாயம் கொடுக்கிறேன்" என்று அவன் கொதித்துக்கொண்டு எச்சரிக்கையாக நின்றான்.

வேலுச்சாமிக் கவுண்டரையே நினைத்துக்கொண்டிருந்த முத்துசாமிக்கு அவர் குளிருக்காகப் போர்த்துக் கொள்ளும் சிவப்புச் சால்வை நன்ருக நினைவிருந்தது. ஆறு வருஷங்களிலே சற்று முதுகு வளைந்து போனது போலத் தோன்றினாலும், அவர் முத்துசாமியின் கண்ணுக்கு வாட்டசாட்டமாகத்தான் தோன்றினர். "களஞ்சியத்திலே அரிசி கொட்டிக் கிடக்கிறது. இவனுக்கென்ன பஞ்சமா? தின்று கொழுத்துப் போயிருக்கிறான்" என்று அவன் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். அதே சமயத்தில் தன் தந்தையின் நினைவும் வந்தது. "நான் ஜெயிலுக்குப் போயிரா விட்டால் அவரும் இவனைப் போலத்தான் தளர்ச்சியில்லாமல் இருந்திருப்பார். என் வீட்டில் அரிசி கொட்டிக் கிடக்காவிட்டாலும் வேலை செய்து சம்பாதித்து அவரை நான் நன்ருக வைத்திருப்பேன். இப்போ எப்படி இருக்கிருரோ?"

இப்படி எண்ணமெழுந்ததும் அவன் உள்ளம் கொந்தளித்தது. ஆத்திரத்தோடு முன்னால் பாய்ந்து கறுப்பண்ணசாமியின் தலையை ஓங்கி வீசினான். வந்தவர் இந்தத் தாக்குதலை எதிர்பார்க்கவேயில்லை. அவர் ஒரு சத்தங்கூடப் போடவில்லை. அப்படியே சுருண்டு விழுந்தார். விழுந்தவர் மறுபடியும் அசையவே இல்லை. மண்டையடிபட்டதால் உடனே உயிர் போயிருக்குமென்று நினைத்துக்கொண்டு முத்துசாமி வீட்டை நோக்கி வேகமாக நடக்கலானான்.

அதிகாலையிலே வரும் ரயிலில் இறங்கி வருகின்றவன்போல அவன் போனான். இதுதான் அவனுடைய திட்டம். மனைவியையும் அருமை மகனையும் தந்தை

யையும் ஆறு வருஷங்களுக்குப் பிறகு அன்று பார்க்கப் போகிறான். அதை எதிர்பார்த்து அவனுள்ளத்திலே எழுந்த இன்ப உணர்ச்சியைவிடத் தான் நினைத்த காரி யத்தைத் தனது திட்டப்படி அன்றே முடித்து விட்ட தற்காகப் பூரிப்பு அதிகமாக இருந்தது. "கறுப்பண்ண சாமி இந்தக் காரியத்திற்காக எனக்கு உதவினாரே அதுவே போதும்; அவர் தலை கைக்கு அடக்கமாக இருந்தது" என்று அவன் நினைத்து உள்ளுக்குள்ளே களிப்படைந்தான். கொலை செய்தது வெளியானால் என்ன செய்வது என்று அவன் சிந்திக்கவில்லை. வேலாங் காட்டிற்கு அவன் சென்றதை யாரும் பார்த்திருக்க முடியாது. மேலும் அவன் கறுப்பண்ணசாமியிடத்திலே அளவு கடந்த பக்தியுடையவன் என்றுதான் ஊரிலே எல்லோருக்கும் தெரியும். அப்படியிருக்கச் சிலையை உடைத்த குற்றத்தையோ அந்தச் சிலையின் தலையைக் கொண்டே கவுண்டரைத் தாக்கிய குற்றத்தையோ யாரும் இவன்மேல் சுமத்தமாட்டார்கள். அப்படி ஒரு எண்ணமே யாருக்கும் உதயமாகாது. கறுப்பண்ணசாமி யிடத்திலே அவனுக்கிருந்த பக்தியைப்பற்றி ஊரிலே அத்தனை மதிப்பு இருந்தது.

முத்துசாமியின் மனைவி சின்னம்மாள் வாசலுக்குச் சாணம் தெளித்துக் கொண்டிருந்தாள். அவள் தன் கணவனைக் கண்டதும் வேலையை விட்டுவிட்டு ஒரே முக மலர்ச்சியோடு அருகில் வந்தாள்.

"காலை ரயிலிலா வந்தீங்க?" என்று என்ன கேட்ப தென்று தெரியாமல் கேட்டாள். அவன் பிரிந்திருந்த வருஷங்களெல்லாம் அவளுக்கு ஒரு இரவு போல மறைந்துவிட்டன.

" சின்னம்மா, இனிக் கவலையில்லை. அந்த வேலுச் சாமிக் கவுண்டனுக்குத் தகுந்த தண்டனை கிடைத்து விட்டது " என்றான் முத்துசாமி.

" ஆமாம், கறுப்பண்ணசாமி சும்மா விடுமா? இருந்தாலும் இப்போ நாம் அப்படிப் பேசப்படாது. அவருடைய தயவினால்தான் இத்தனை காலமாக நாங்கள் பிழைத்தோம் " என்று சின்னம்மாள் ஆழ்ந்த சிந்தனை யோடு தெரிவித்தாள்.

" அவன் தயவிலா? அதெப்படி?" என்று ஆத்திரப் பட்டான் முத்துசாமி.

" உங்களைக் கேசிலே சிக்கவைத்தது அவர்தான். ஆனால், அப்புறம் என்னமோ அவருக்கு மனசு மாறிப் போய்விட்டது. கறுப்பண்ணசாமியை அவரும் தினமும் கும்பிடுவாரே, அந்த சாமிதான் அப்படிப் பண்ணி யிருக்கும். உங்கள் தகப்பனாரும் குழந்தையும் பட்ட கஸ்டத்தைப் பார்த்துவிட்டு அவருக்கே விசனமாய்ப் போச்சு. நம்ம பையன் பேருக்கு மூணு ஏக்கரா நிலம் எழுதிக் கொடுத்துவிட்டார். அதை வைத்துத்தான் குடும்பம் சுகமாக நடக்குது."

" மூணு ஏக்கரா எழுதி வச்சானா? அத்தனை இரக்கம் எப்படி வந்தது அவனுக்கு?"

" அவருக்கு திடீர்னு பக்கவாதம் வந்து படுகிடை யாக விழுந்துட்டார். அதெல்லாம் உங்களை ஜெயிலில் போட்டதினாலே வந்த வினைதான் என்று அவர் சொல் லிக்கொண்டே இருந்தார். கறுப்பண்ணசாமி தண்டிச் சுட்டாறு என்று நினைச்சார். பக்கவாதம் சுகமானால்

கறுப்பண்ணசாமிக்குப் பெரிய கோயில் கட்டி வைக்கிறதாக வேண்டுதலையெல்லாம் பண்ணினார். ஆனால், ஒன்றும் சரியாகலை. கடைசி வரையிலும் படுக்கையாகவேதான் கிடந்தார்.”

“என்னது? அவரு இப்போ எங்கே?” என்று திடுக்கிட்டுக் கேட்டான் முத்துசாமி.

“அவர் செத்துப்போய் நாலு மாசத்துக்கு மேலாவுது. அவர் சாகிறபோது சொல்லிட்டுச் செத்ததுபோல உங்க அப்பாதான் இப்போ தினமும் காலையிலே கறுப்பண்ணசாமியைக் கும்பிடப் போறாங்க. நீங்க சுகமாகத் திரும்பி வர வேணும்னு பண்ணைக்காரர் தினமும் கும்பிடச் சொன்னாங்களாம்.”

“அய்யோ கறுப்பண்ணு, இந்த ஆத்திரக்காரனைக் காப்பாத்துவாயா? என்னைக் காப்பாத்த வேண்டாம்; என் தகப்பனாரையாவது காப்பாத்து, காப்பாத்து” என்று அலறிக்கொண்டே முத்துசாமி வேலாங்காட்டை நோக்கி வெறி பிடித்தவன்போல ஓடினான்.

# டெலிபோன் மணி

'ஏண்டா, முன்னாலேயே கூட்டி வந்திருக்கப் படாதா? இந்த நாள்வரையிலும் அங்கே எதற்காக இருந்தாய்?'

'அட போடா, இதெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது. சுத்த முட்டாள்தனம்.'

'நீ அப்படி நினைக்கிறாய்—ஆனால், மைதிலி அப்படி நினைக்கவில்லையே? அவளை நினைத்து நீ முன்னாலேயே வந்திருக்கவேண்டும். அவளை அந்த வீட்டில் இருக்க விட்டிருக்கப்படாது.'

'ஆமாம், சோமு. அவள் நிலைமையை உத்தேசம் பண்ணித்தான் இன்றைக்காவது வர இசைந்தேன். இல்லாவிட்டால் இந்த மூடநம்பிக்கைக்கு நான் காது கொடுத்தே இருக்கமாட்டேன்.'

'தாயார் இறந்தது கேட்டை நட்சத்திரத்திலா?'

'அதையெல்லாம் நான் எங்கடா பார்த்தேன்? அவள் தான் யாரையோ கேட்டுத் தெரிந்து கொண் டிருக்கிருள். அதுதான் அவளுக்கு இத்தனை பயம். தாயார் இறந்தபிறகு முதல் தடவையாக மறுபடியும் இன்றைக்கு அதே நட்சத்திரம் வருகிறதாம். அதனுலே இன்று ராத்திரி பன்னிரண்டு மணிக்குத் தாயாருடைய ஆவி எங்கள் வீட்டிலே வந்து உலாவுமாம். எல்லாம் ஒரே குருட்டு நம்பிக்கை' என்று சொல்லிவிட்டு அவன் நிம்மதியிழந்தவன் போல எழுந்து நடமாடிக் கொண்டே சன்னல் அருகே போனுன்.

'கமலநாதா, அது குருட்டு நம்பிக்கையோ இல்லையோ, மைதிலிக்கு இந்தச் சமயத்திலே அனுவசிய மான பயமோ அதிர்ச்சியோ ஏற்படக்கூடாது. அதுதான் முக்கியம்.'

'அதை நினைச்சுத்தான் என் கொள்கையைக்கூட விட்டுக் கொடுத்துவிட்டு வீட்டை இழுத்துப் பூட்டி விட்டு வந்திருக்கிறேனே, இன்னும் என்ன செய்ய வேணும்?' என்று கமலநாதன் சற்று கடுகடுத்த குரலில் பேசினுன்.

சோமசுந்தரம் தன் நண்பனுடைய மனநிலையை அறிந்து பேச்சை மாற்ற முயன்றுன்.

'ஏண்டா, சினிமாவுக்குப் போகலாமா? இப்போ புறப்பட்டால் இரண்டாவது காட்சிக்கு நேரம் கணக் காக இருக்கும். தமிழ்ப் படம் முடிவதற்கும் மணி இரண்டாகிவிடும்.'

'நான் தயார்—ஆனுல், மைதிலி வரமாட்டாளே? இப்போ பார்த்தாயா? இங்கே பேசிக்கொண்டிருக்கக்

2

கூட அவளுக்கு இஷ்டமில்லை. அந்த அறையிலே டெலி போனுக்குப் பக்கத்திலேயே கட்டிலைப் போட்டுக் கொண்டு படுத்திருக்கிறாள்.'

'டெலிபோனுக்குப் பக்கத்திலா?'

'ஆமாம்; இன்னொரு வேடிக்கை தெரியுமா? உன் வீட்டு டெலிபோன் நம்பரைக் கொட்டைகொட்டையாக ஒரு அட்டையிலே எழுதி என் வீட்டு டெலிபோனுக்குப் பக்கத்திலே மாட்டிவிட்டு வந்திருக்கிறாள். அம்மா ளுடைய ஆவி வீட்டுக்கு வந்ததும் இவளுக்கு இங்கே டெலிபோன் செய்யுமோ என்னவோ?'

'சரிதாண்டா, உன் கேலியும் நீயும். நீ போய் அவ ளுக்குத் தைரியமுண்டாகும்படி ஏதாவது பேச்சுக் கொடு. இந்தச் சமயத்திலே கமலம் இல்லாமல் போய் விட்டாளே, அவள் இருந்திருந்தால் மைதிலிக்கு இன்னும் தைரியமாக இருக்கும். நீங்கள் வருகிற விஷயம் தெரிந் திருந்தால் அவளை ஊருக்கு அனுப்பாமல் நிறுத்தி யிருப்பேன்.'

'சாயங்காலம் ஆபீசிலிருந்து வந்த பிறகுதாண்டா இங்கே வருவதாக முடிவு செய்தேன். அவள் படுகிற அவஸ்தையைப் பார்த்துவிட்டுத்தான் சட்டென்று இந்த எண்ணம் எனக்கு வந்தது. உடனே உனக்கு டெலி போன் பண்ணினேன்.'

'நல்லவேளை, கடைசிநேரத்திலாவது, உனக்கு நல்ல புத்தி வந்ததே. இல்லாவிட்டால் மைதிலி இரவெல்லாம் நரகவேதனைப் பட்டிருப்பாள்; சரி நீ இப்போ போய் அவளைக் கவனி.'

மேலும் பேச்சுக் கொடுக்க விரும்பாதவன் போல சோமசுந்தரம் எழுந்தான். கமலநாதனும் தன் மனைவி மைதிலி படுத்திருந்த அறையை நோக்கி நடந்தான். அது படுக்கையறைக்காக ஏற்பட்டதல்ல. இருந்தாலும் டெலிபோன் அந்த அறையில் இருந்ததால் அங்கேயே படுக்க வேண்டுமென்று மைதிலி விரும்பியதால் அங்கு இரண்டு கட்டிலைப் போட்டிருந்தார்கள்.

மைதிலி டெலிபோனுக்கு அருகிலேயே படுத்திருந் தாள். அவள் தூங்கவில்லை ; ஆனால், கண்களை மூடிக் கொண்டு ஆழ்ந்த சிந்தனையிலிருந்தாள்.

கேட்டை நட்சத்திரத்தில் இறந்தவர்கள் பேயாகச் சில காலம் திரிவார்கள் என்றும், அந்த நட்சத்திரம் மீண்டும் வரும்போது அவர்கள் வசித்திருந்த வீட்டிற்கு வருவார்கள் என்றும் அவள் பல தடவை கேள்விப் பட்டிருக்கிறாள். கிராமத்துச் சூழ்நிலையிலே வாழ்ந்த அவளுக்கு அதிலே ஆழ்ந்த நம்பிக்கை யிருந்தது. சென்னைப் பட்டினத்தில் ஐந்தாறு வருஷங்கள் வசித்த பிறகும் அந்த நம்பிக்கை மாறிவிடவில்லை. பட்டினத்தில் மட்டும் மக்களுக்குப் பேயென்றால் பயம் இல்லையா என்ன ?

மைதிலி தன் மாமியாரிடம் நடந்து கொண்ட விதத்தையெல்லாம் எண்ணிப் பார்த்தாள். 'அவர் களுடைய மனம் புண்படும்படியாக நான் அப்படி யொன்றும் நடந்ததில்லை. இருந்தாலும் என்மேல் மாமி யாருக்குக் கோபம் இருக்கலாம். யார்கண்டார்கள் ? சாவ தற்குச் சில நாட்களுக்கு முன்பு கூடச் சின்ன விஷயத் திற்காக எரிந்து விழவில்லையா ? ...ஆனால், அப்படிக்

கோபம் இருந்தாலும் நான்தான் இப்பொழுது சிந்தா திரிப்பேட்டையை விட்டுத் தியாகராயநகர் வந்து விட்டேனே ?....மாமியார் இரவு பன்னிரண்டு மணிக்கு வந்தாலும் சிந்தாதிரிப்பேட்டை வீட்டுக்குத்தானே போவார்கள் ? இங்கே எனக்கென்ன பயம் ?......இருந் தாலும் மாமியார் என்றே யாரும் இருக்கப்படாது.... ஆனால், அது எப்படி முடியும் ?' என்றிவ்வாறெல்லாம் சிந்தனை அலைகள் அவள் உள்ளத்திலே மோதிக்கொண் டிருந்தன. அவள் படுத்திருந்த அறையிலே மின்சார விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது.

மைதிலி கண்களை மூடியிருந்ததால் உறங்குகிறு ளென்று நினைத்து அவள் உறக்கத்தைக் கலைக்கக்கூடா தென்று கமலநாதன் சப்தம் செய்யாமல் தனது கட்டிலில் படுத்தான். இருந்தாலும் மைதிலி மிகுந்த எச்சரிக்கை யோடும், உணர்ச்சி வசப்பட்டுமிருந்ததால், 'ம்...... யாரது ?' என்று கூறிக்கொண்டே திடுக்கிட் டெழுந்தாள்.

'நான்தான், மைதிலி. நீ படுத்துத் தூங்கு' என்றான் கமலநாதன்.

மைதிலி மெதுவாகப் படுக்கையில் சாய்ந்தாள்.

'நாளைக்குக் காலையிலே கந்தகோட்டத்திலே விசேஷமாம். நாம் போகலாமா ?' என்று கேட்டான் கமலநாதன்.

'நாளைக்கா ?' என்று அடுத்த நாளைப்பற்றி ஏதோ சந்தேகத்தோடு மைதிலி பதில் கேள்வி கேட்டாள்.

'ஆமாம், காலையிலே எழுந்ததும் குளித்துவிட்டு நேராகக் கந்தகோட்டத்திற்குப் போகலாம். சுவாமி

தரிசனம் பண்ணிக்கொண்டு அப்படியே நம் வீட்டுக்குப் போவோம்.'

மைதிலிக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது. 'அது தான் நல்லது. அப்படியே செய்வோம். கார் சரியாக இருக்கிறதா? நேற்றுப் புறப்படுகிறபோது தொந்தரவு கொடுத்ததே?'

'அதெல்லாம் சரியாகிவிட்டது......நீ காலையிலே நேரமே எழுந்து தயாராக வேணும். அதனாலே இப்பவே தூங்கு. எனக்கும் தூக்கம் வருகிறது.'

கமலநாதன் ஏதோ கவலையில்லாதவன் போலத் தான் பேசினான். ஆனால், அவனுக்குத் தூக்கம் வர வில்லை. ஏதேதோ எண்ணமிட்டுக்கொண்டு படுத்திருந் தான். மைதிலியைப் பற்றிய கவலை அவன் எண்ணங் களுக்கு அடிப்படையாக நின்றது.

கிராம மக்களின் நம்பிக்கைகளும் எண்ணங்களும் அவனுக்கு வேடிக்கையாக இருந்தன. மைதிலி சில சமயங்களிலே வெளியிட்ட குருட்டு நம்பிக்கைகளை நினைத்து அவன் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டான். அவற்றிற்காக அவன் மைதிலியிடம் கோபமோ, வெறுப்போ கொள்ளவில்லை. கேட்டை நட்சத்திரத்தை நினைத்து அவள் மிகுந்த பயம் கொண்டிருந்தாலும், தன்னை வீட்டில் தனியே விட்டுவிட்டுக் கிராமத்திலுள்ள தன் தாய் வீட்டிற்குப் போக அவள் மறுத்ததையும், அதற்குக் காரணமாக இருக்கும் அவளுடைய ஆழ்ந்த அன்பையும் நினைத்து அவன் மகிழ்ச்சியடைந்தான். அவள் நினைக்கிறது போல் பேயென்று ஒன்று இருக்க முடியுமா? இதெல்லாம் சுத்த மூடக் கொள்கை. இவ்

வாறுக அவனுடைய சிந்தனை பல திசைகளில் ஓடிக் கொண்டிருக்கும்போது எப்படியோ தூக்கம் அவனைச் சூழ்ந்துகொண்டது.

அவன் இரண்டு மணி நேரம்கூடத் தூங்கியிருக்க மாட்டான். யாரோ வீரிட்டலறுவதுபோல் சப்தம் கேட்டு அவன் திடுக்கிட்டெழுந்தான்.

முதலில் அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. மங்கிய மின்சார விளக்கொளியில் மைதிலியின் முகம் பயங்கரமாகக் காட்சியளித்ததைக் கவனித்தபோதுதான் அவனுக்கு நிலைமை திடீரென்று தெளிவாயிற்று.

மைதிலி டெலிபோன் கருவியைக் காதில் வைத்துக் கொண்டு அதில் யாரோ பேசுவதைக் கேட்டுக் கொண் டிருந்தாள். அவள் கண்களிலே பயம் தாண்டவ மாடியது. கைகள் நடுங்கின. 'ஐயோ, நான்தான் மாமி' என்ற வார்த்தைகள் அவள் நெஞ்சைப் பிளந்துகொண்டு பெருமூச்சோடு வெளிப்பட்டன.

'மைதிலீ, என்ன அது?' என்று கேட்டுக்கொண்டே கமலநாதன் தடாலென்றெழுந்து அவளிடம் பாய்ந்து சென்றான்.

மைதிலிக்குப் பதில் சொல்ல நா எழவில்லை. அவள் உடம்பெல்லாம் குப்பென்று வேர்த்து ஒழுகிக்கொண் டிருந்தது.

கமலநாதன் டெலிபோன் ரிசீவரை அவள் கையி லிருந்து பிடுங்கித் தன் காதில் வைத்துக் கேட்டான்.

ஆமாம், சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள அவன் வீட்டிலிருந்துதான் பேச்சுக் குரல் வந்தது. கலவரமான

சத்தத்திற்கும் பேச்சுக்குமிடையே, 'யாரடா டெலி போனை எடுத்தது? பேசாமல் அதை வையடா' என்ற அதிகாரக் குரலும் கேட்டது.

பேயில் நம்பிக்கை சிறிதுமில்லாத கமலநாதனைக் கூட இந்தக் குரல் ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. ஆனால், அவன் எப்படியோ சமாளித்துக்கொண்டு சிந்தாதிரிப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலி போன் செய்யத் தொடங்கினான்.

'நான்தான் கமலநாதன். தியாகராயநகரிலிருந்து பேசுகிறேன். சிந்தாதிரிப்பேட்டை கணபதி முதலியார் தெருவில் பத்தாம் நம்பர் பங்களா என்னுடையது. அங்கே ஏதோ கலவரமாக இருக்கிறது.........ஆமாம் சார்—அங்கே சொந்தக்காரர் யாரும் இல்லை. இன்றைக்கு மாலையில்தான் நானும் என் மனைவியும் பங்களாவை இழுத்துப் பூட்டிவிட்டு வந்தோம். அதற்குள்ளே கல வரம் நடக்கிறதென்று டெலிபோனில் தெரிந்தது. உடனே போலீசை அனுப்புங்கள்......சரி சார்—நானும் உடனே வருகிறேன்......நமஸ்காரம்—ரொம்ப நன்றி சார்' என்று அவன் வேகமாகப் பேசினான்.

மைதிலி அப்படியே பிரமை பிடித்தவள்போல உட்கார்ந்திருந்தாள்.

'மைதிலி, பயப்படாதே. அதெல்லாம் ஒன்று மில்லை' என்று கமலநாதன் தைரியம் சொல்லிக்கொண் டிருக்கும்போதே அவனுடைய பேச்சுக் குரல் கேட்டு சோமசுந்தரம் தூக்கம் கலைந்து அங்கு வந்து சேர்ந்தான்.

'சோமு, இவளைக் கவனித்துக்கொள். நான் சிந்தாதிரிப்பேட்டைக்குப் போய்விட்டு வருகிறேன்' என்று படபடத்த குரலில் பேசினான் கமலநாதன்.

'என்னடா, எதுக்கு இத்தனை படபடப்பு? கேட்டை நட்சத்திரம் பார்க்கப் போகிறாயா?' என்று அலட்சியமாக சோமசுந்தரம் கேட்டான்.

'இல்லையடா, என்னமோ விஷயம் இருக்கிறது. இன்னும் கொஞ்ச நேரத்திலே எல்லாம் தெரிந்து போகும்' என்று சொல்லிக்கொண்டே கமலநாதன் ஜிப்பாவை எடுத்து மாட்டிக்கொண்டு புறப்படத் தொடங்கினான்.

மைதிலிக்கு அப்பொழுதுதான் வாய் பேச வந்தது. 'நீங்கள் போகவே கூடாது—நான் விடவே மாட்டேன். கேட்டை ரொம்பப் பொல்லாதது' என்று அவள் கதறினாள். என்ன சமாதானம் கூறியும் கமலநாதன் புறப்படுவதற்கு அவள் சம்மதிக்கவில்லை. கடைசியில் மூவரும் சேர்ந்து புறப்படுவதென்று ஒருவாறு தீர்மானம் செய்தார்கள்.

சோமசுந்தரம் தனது பங்களாக் கதவுகளை இழுத்துப் பூட்டுவதில் முனைந்தான். கமலநாதன் காரை வாசலிலே கொண்டுவந்து நிறுத்தினான்.

பத்து நிமிஷத்தில் அவர்கள் புறப்பட்டுவிட்டார்கள். அடுத்த பதினைந்து நிமிஷங்களிலே சிந்தாதிரிப் பேட்டை வந்துவிட்டார்கள்.

கர்ப்பிணியாக இருக்கும் மைதிலியின் நிலையைக் கூடக் கவனியாமல் அத்தனை வேகமாகக் காரை ஓட்டிய

தற்காகக் கமலநாதனை சோமசுந்தரம் மனதிற்குள்ளே நொந்துகொண்டிருந்தான்.

கணபதி முதலியார் தெருவிலே பத்தாவது பங்களாவின் வெளிவாயிலில் நின்ற போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் அவர்களை வரவேற்றார்.

'மிஸ்டர் கமலநாதன், உங்கள் சமயோசித புத்தியை நான் பாராட்டுகிறேன். கொஞ்சம் தாமதம் செய்திருந்தால் காரியம் மிஞ்சிப் போயிருக்கும்' என்று இன்ஸ்பெக்டர் நல்வரவு கூறினார்.

காரில் வந்த மூவருக்கும் விஷயம் உடனே விளங்கவில்லை. அவர்கள் பங்களாவுக்குள் காலெடுத்து வைத்தார்கள். கையில் விலங்கு பூட்டப்பட்டு ஐந்து பேர் அங்கே நின்றுகொண்டிருந்தார்கள். போதை வெறி அவர்கள் கண்களிலே இன்னும் மறையவில்லை. ஆறேழு போலீஸ்காரர்கள் அவர்களைக் காவல் புரிந்தார்கள்.

'நீங்கள் வீட்டிலில்லாத விஷயம் எப்படியோ இவர்களுக்குத் தெரிந்திருக்கிறது' என்று இன்ஸ்பெக்டர் விளக்கம் கூறத் தொடங்கினார்.

அவர் தாம் கைது செய்த ஆட்களுடனே (போலீஸ் ஸ்டேஷனுக்குப்) போன பிறகுதான் கமலநாதனும் சோமசுந்தரமும் கேட்டை நட்சத்திரத்தைப்பற்றிப் பேசத் தொடங்கினார்கள்.

'அந்த நட்சத்திரம் நல்லதே பண்ணியிருக்கிறது' என்றான் சோமசுந்தரம்.

'போடா, அதெல்லாம் சுத்த முட்டாள்தனம்—என்னவோ தற்செயலாகத் திருட்டு விஷயம் நமக்குத் தெரிந்துவிட்டது—அவ்வளவுதான்.'

'தற்செயலாகவா? அப்படியானால் எனக்கு இங்கிருந்து யார் டெலிபோன் செய்தது?' என்று அப்பொழுது தான் பேசுவதற்கு தைரியம் கொண்டாள் மைதிலி.

'நீ கனாக் கண்டிருப்பாய்..........இங்கிருந்து யார் உன்னைக் கூப்பிட்டிருக்க முடியும்?' என்று பிடிவாதமாகப் பேசினான் கமலநாதன்.

'கனாவா? இல்லவே இல்லை. நான் தூங்கவே இடையாது. டெலிபோன் மணி கேட்டுத்தான் பேசப் போனேன். மாமி குரல் எனக்கு நன்றாகக் கேட்டது' என்று மைதிலி சாதித்தாள்.

'மருண்டவள் கண்ணுக்கு எல்லாம் அப்படித்தானிருக்கும்—எனக்கென்னமோ அந்தக் குடிகாரப் பயல்கள் பேச்சுத்தான் கேட்டது. கடைசியிலே ஒருத்தன் இன்னொருத்தனைப் பார்த்து டெலிபோன் ரிசீவரை உடனே வைக்கும்படி அதட்டியபோதுதான் எனக்கு விஷயம் விளங்கிற்று.'

'திருடன் நமக்கே டெலிபோன் பண்ணுவானா?'

'அவன் டெலிபோன் பண்ணினானோ என்னவோ. குடிவெறியிலே டெலிபோன் ரிசீவரையாவது கையிலெடுத்திருக்க வேண்டும்.'

'பிறகு இங்கெப்படி மணி அடித்தது? இந்த டெலிபோனுக்கும் நம் வீட்டுக்கும் தொடர்பு முதலில் ஏற்பட்டதனால்தானே இங்கே நடந்த கலவரம் உங்களுக்குத் தெரிந்தது? மாமிதான் முதலில் டெலிபோனில் கூப்பிட்டது. அவர் குரல் எனக்கு நன்றாகக் கேட்டதே?'

கமலநாதன் ஏதோ பேச வாயெடுத்தான். ஆனால் அவன் நண்பன் அவனைப் பேசவிடவில்லை.

'மைதிலி, அவனிடத்திலே விடியுமளவும் பேசினாலும் அவன் ஒத்துக்கொள்ளமாட்டான். இப்போ கொஞ்ச நேரமாவது நீ நிம்மதியாகத் தூங்கு. நாளைக்கு எல்லாம் பேசிக்கொள்வோம்' என்று இந்த விவாதத்திற்குச் சோமசுந்தரம் முடிவு கட்டினான்.

# புயல்

சுமார் ஒரு வாரத்திற்கு முன்னே ஒருவனை ஒருவன் விட்டுப் பிரிந்த அவர்கள் இருவரும் இதைவிட நெருக்கடியான நிலைமையிலே சந்தித்திருக்க முடியாது.

எட்டுத் திக்கிலும் கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலும் கொந்தளித்துக் குமுறும் கடல். அவர்கள் இருவரையும் சேர்ந்து ஏப்பமிடுவதற்கு வெறிக்கொண்டு பேய்க் கூத்தாடும் அலைகள்.

'ஹோ ஹோ' வென்று புயற்காற்றுச் சீறுகிறது. கடல் தலை விரித்தாடுகிறது. அலைகள் கொக்கரிக்கின்றன.

காளி தன் கட்டுமரத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு உயிருக்கு மன்றாடுகிறான். அலைகள் அவனைக் கட்டுமரத்தோடு சேர்த்து அம்மானையாடுகின்றன. ஐந்து நாட்களாக அவன் பட்டினி.

கங்கப்பன் அலைகளோடு போராடிக் கொண்டு தனது கட்டுமரத்தைக் காளியினருகே செலுத்த முயல்கிறான். ஐந்து நாட்களாக அவன் அரைப்பட்டினி. இருந்தாலும் அவன் தனது முயற்சியில் தளரவில்லை.

காளி அவனைப் பார்த்துவிட்டான். பார்த்ததும் அவன் உள்ளத்திலே ஒரு பெரும் புயல் கிளம்பியது. வான வெளியிலே வீசிக் கொண்டிருந்த புயலைக் காட்டிலும் பயங்கரமான புயல் அது. கங்கப்பனுடைய உயிரைக் குடித்துவிட வேண்டுமென்ற கோபவேசக் கொடுங்கனல் அது. தனது ஆத்திரத்தையெல்லாம் தீர்த்துக்கொள்ள அப்பொழுதாவது சமயம் கிடைத்ததே யென்று அவன் சந்தோஷப்பட்டான். சாவதற்கு முன்னாலே வஞ்சம் தீர்த்துக் கொள்ள வழியேற்பட்டதைப் பற்றி அவனுக்கு அத்தனை திருப்தி.

கொம்மாளமிட்டுப் பேய்ச் சிரிப்புச் சிரிக்கும் அலைகளினிடையே கங்கப்பனுடைய துடுப்பு வலிமையோடு பாய்கிறது. காளியின் கட்டுமரத்தை எப்படியாவது அடைய வேண்டுமென்ற உறுதி அவனுக்கு என்றுமில்லாத வலிமையைத் தந்தது. அவன் முழுக் கவனமும் கட்டுமரத்தைச் செலுத்துவதிலேயே இருந்தது.

கங்கப்பன் வெகு சமீபத்தில் வந்துவிட்டான். காளிக்கு அதற்குமேலே பொறுத்திருக்க முடியவில்லை. இன்னும் எதற்குப் பொறுக்கவேண்டும்? அரிவாளை வீசுவதற்கு அதுதான் சரியான தூரம். இப்பொழுது வீசினால் அரிவாள் கங்கப்பன் தலையை நிச்சயமாகத் துண்டித்துக்கொண்டு போய்விடும்.

ஏழு நாட்களுக்கு முன்புதான் காளி அந்தக் கொடிய அரிவாளைத் தன் இடுப்பிலுள்ள இரட்டை அரை நாணிலே செருகினான். ‘ கங்கப்பன் தலையை வாங்காமல் இதை இடுப்பிலிருந்து எடுப்பதில்லை. கன்னியம்மன் மீது ஆணை ’ என்று சபதம் செய்து கொண்டிருந்தான். அந்தச் சபதம் நிறைவேறத் தருணம் வாய்த்துவிட்டது.

காளி அரிவாளை எடுத்தான். பட்டினி மயக்கத்திலும் அவனுடைய கோபவெறி ஒரு சக்தியைக் கொடுத்தது. கங்கப்பன் தலையைத் துண்டிக்கும் நோக்கத்தோடு பல்லைக் கடித்துக்கொண்டு அரிவாளை ஓங்கி வீசியெறிந்தான்.

1953-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22-ம் தேதியன்று வங்காளக்குடாக் கடலில் நடந்த சம்பவம் இது. ஆறு நாட்களுக்கு முன்னால் அதாவது 16-ஆம் தேதி இரவு சென்னைக் கடற்கரையை விட்டுச் சுமார் நூறு கட்டு மரங்கள் கோலா என்னும் ஒருவகைப் பறக்கும் மீன் வேட்டைக்குப் புறப்பட்டன. ஒரு கட்டுமரத்திலே சாதாரணமாக மூன்று நான்குபேர் போவார்கள். ஆனால், காளியும் கங்கப்பனும் இந்த முறை தனித்தனியாகவே சென்றார்கள்.

ஒவ்வொரு வருஷமும் ஜூன் மாதத்திலே இரண்டு மூன்று வாரங்களுக்கு இந்த மீன்கள் கூட்டங் கூட்டமாகப் பறந்து வரும். சென்னையை விட்டு சுமார் நாற்பது மைல் கடலுக்குள்ளே சென்றால் அவை வரும் பகுதியை அடையலாம். எளிதிலே கொழுத்த வேட்டை கிடைக்கும்.

ஆனால், இந்த வருஷம் எதிர்பாராதபடி ஏற்பட்ட புயலால் மீன் பிடிப்பவர்களுக்கு வேட்டை கிடைக்காத தோடு அவர்கள் உயிருக்கே ஆபத்தாக முடிந்தது. கட்டு மரங்களெல்லாம் திக்குக்கொன்றாகச் சிதறிவிட்டன. திசை தெரியாமலும், புயலை எதிர்த்துக் கட்டுமரத்தைச் செலுத்த இயலாமலும் மீன் பிடிப்பவர்கள் தவித் தார்கள். ஒவ்வொரு நிமிஷமும் உயிர் போவதும் வருவது மாக இருந்தது.

இந்த நிலையில்தான் கங்கப்பன் எப்படியும் காளியைத் தேடிப் பிடிக்க வேண்டுமென்று தன் கட்டு மரத்தைச் செலுத்திக்கொண்டு வந்தான்.

புயல் சீறிற்று. அலைகள் குன்றுகளைப்போல மேலெழுந்தன. கங்கப்பனுடைய கட்டுமரம் அவற்றிலே ராட்டினம் போலே மேலெழுந்து மறுபடியும் கீழே பாய்ந்தது. கங்கப்பன் தலை தடாரென்று கட்டுமரத்திலே மோதியது. நல்ல வேளை ; அவன் அப்படி மோதிக் கொண்டதால் காளியின் அரிவாள் குறி தவறிப் போய் விட்டது. கடலுக்குள்ளே அது வேகமாகப் பாய்ந்து மறைந்தது.

காளி வீசிய அரிவாளைக் கங்கப்பன் கவனிக்கவே யில்லை. அவன் அலைகளோடு போராடிக்கொண் டிருந்தான். காளியின் அருகே செல்லுவதிலேயே அவன் நாட்டமெல்லாம் நிலைத்திருந்தது. அடுத்த கணத்திலே அந்த எண்ணமும் கைகூடிவிட்டது.

‘ அண்ணே, உன்னைத்தான் சுத்திச் சுத்தித் தேடிக்கினு வந்தேன். எங்கே கையிலே துடுப்பைக்

காணோமே ? அலையிலே அடிச்சுக்கினு போய்ட்டுதா ?' என்று கூவினான் கங்கப்பன்.

'துடுப்பிருந்தா இப்போ உன் தலையை உடைச் சிருக்க மாட்டேனா ?' என்று சீறினான் காளி. என்ன சீறினாலும் பட்டினிச் சீறல்தானே ? அலையின் வெறிக் கூச்சல் அதை விழுங்கிவிட்டது. கங்கப்பன் காதில் அது விழவில்லை.

கங்கப்பன் காளியில் கட்டுமரத்தைக் கையிலே பிடித்துவிட்டான். கையை ஓங்கிக்கொண்டு கண் களிலே தீப்பறக்கத் தன்னை மறந்து எழுந்தான் காளி. ஆனால், ஒரு அலை அவனைக் கடலுக்குள்ளே தூக்கி யெறிந்தது. அவன் கோபத்தோடு கையை ஓங்கி யதைக் கங்கப்பன் கவனிக்கவில்லை. கட்டுமரம் ஆட்டங் கொடுப்பதால் அவன் கையை வீசியதாகவே கருதி யிருக்க வேண்டும். கங்கப்பன் ஒரே பாய்ச்சலில் பாய்ந்து அவன் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு தனது கட்டுமரத்திற்குத் திரும்பி வந்துவிட்டான்.

உள்ளத்திலே எழுந்த கோப பூகம்ப அதிர்ச்சி யாலும், பட்டினிக் களைப்பாலும் காளி சோர்ந்து படுத் திருந்தான். பக்கத்தில்தானே இருக்கிறான் கங்கப்பன் ? சோர்வு நீங்கியதும் அவன்மேல் பாய முடியாதா என்ன ?

கங்கப்பன் தான் உண்ணாமல் பத்திரமாகக்கொண்டு வந்திருந்த ரொட்டித் துண்டை எடுத்து அவனுக்குக் கொடுத்தான். இதைக் காளி எதிர்பார்க்கவில்லை. 'இவன் எதற்கு எனக்கு ரொட்டி கொடுக்கவேணும் ?' ஆனால் அதை ஆலோசிக்கப் பசி விடவில்லை.

காளி மௌனமாக ரொட்டியை வாங்கி வாயில் போட்டுமென்று கொண்டிருந்தான்.

'இந்த வருஷம் கோலா மீன் வேட்டை இப்படி ஆகும்னு யாரும் கனவில்கூட நினைச்சிருக்க மாட்டார்கள்' என்று மெதுவாகப் பேச்சுக் கொடுத்தான் கங்கப்பன்.

காளி ஒன்றும் பேசவில்லை.

'எனக்குத் தெரிஞ்ச வரையிலும் கோலா மீன் வேட்டைக்கு இடைஞ்சலாக இந்த மாசத்திலே புயல் எப்பவும் வந்ததே இல்லை.' கங்கப்பன்தான் மறுபடியும் பேசுகிறான். காளி ஒரே மௌனம்.

வெளியிலே புயல் ஓயவில்லை. காளியின் மனத்திலும் இன்னும் புயல் ஓயவில்லை.

காளி கங்கப்பனைவிட இரண்டு வயது மூத்தவன். அதனால் கங்கப்பன் அவனை அண்ணுவென்று கூப்பிடுவான். இருவரும் சென்ற வாரம்வரையிலும் உயிருக்குயிரான அண்ணன் தம்பிகள்போலத்தான் இருந்தார்கள். ஒரே கட்டுமரத்தை வைத்துக்கொண்டு மீன் பிடித்து வாழ்க்கை நடத்தி வந்தார்கள். ஆனால், இந்த வாரத்திலே நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. காளி தனியாகப் பிரிந்துவிட்டான். பிரிந்து போனதோடு அவன் கோபம் தீர்ந்துவிடவில்லை. கங்கப்பனைக் கொன்று தீர்த்துவிட வேண்டுமென்றே கறுவிக்கொண்டிருந்தான். இப்படி அவன் நினைப்பதைக் கங்கப்பன் அறியான்.

'அண்ணே, எப்படியாவது உன்னைக் கடலிலே தேடிக் கண்டுபிடித்து என்னுலான உதவி செய்ய வேணும்னுதான் வந்தேன்' என்ருன் கங்கப்பன்.

'என்னுத்துக்கு? நான் உனக்கு என்னுத்துக்கு வேணும்? நான் செத்துப்போனுல் உனக்கு நல்லது தானே?' காளியின் கோபம் அவனையும் அறியாமல் அப்படிப் பொத்துக்கொண்டு வெளிப்பட்டுவிட்டது.

கங்கப்பன் கொஞ்சநேரம் ஆலோசனைபண்ணினுன். காளியின் வார்த்தைகள் அவனை உலுக்கின. கட்டு மரத்தைப் புயற்காற்று உலுக்கிற்று. ஆனுல், காளியின் மனத்தை உலுக்கிய கோபப் புயலுக்கு இவையெல்லாம் இணை நிற்கமுடியாது.

'கன்னியம்மன் கோயிலுக்குப் போய் வாக்குக் கேக்காமே முனியம்மா ஒண்ணுமே பண்ணமாட்டாள்னு உனக்குத் தெரியாதா, அண்ணே? கன்னியம்மனைக் கும்பிட்டுத்தான் ருக்குமணி அவளுக்குப் பிறந்தாளாம்' என்று கங்கப்பன் விஷயத்தை மெல்ல ஆரம்பித்தான்.

'அந்தப் பேச்சு இப்போ என்னுத்துக்கு? எதுக் கெடுத்தாலும் கன்னியம்மன் தலையிலே போட்டுட்டாத் தீர்ந்து போச்சு. அம்மன் பேரைச் சொல்லி ருக்கு மணியை உனக்குக் கண்ணுலம் பண்ணலாம்னு நினைச்சுக் கிட்டாளா அந்த முனியம்மா?' என்று காளி குமுறினுன்.

'அண்ணே, கன்னியம்மனிடத்திலே உனக்கு நம் பிக்கையில்லையா? நீயும் அந்த அம்மன் கோவிலுக்குப் போகாமெ இருக்கமாட்டியே? கன்னியம்மாதானே நமக்கு தெய்வம்?'

'கன்னியம்மன் வாக்குக் கொடுத்தது மெய்யா? இதெல்லாம் வெறும் புரட்டு. இவளுக்குத் தன் மகளை உனக்கே கொடுக்கவேணும்னு ஆசை. உனக்கும் நீயே கட்டிக்கவேணும்னு ஆசை. அதுக்குக் கன்னியம்மன் மேலே பழியைப் போட்டாச்சு—அவ்வளவுதானே?'

'கன்னியம்மா வாக்குக் கொடுத்ததை முனியம்மா சொன்னவுடனே ,அதை அப்படியே நான் நம்பவில்லே. கண்ணாலத்துக்கு ஒத்துக்கவும் இல்லே. எதுக்கும் நானும் அவங்ககூட ஒருதடவை கோட்டை மைதானத்துக் கன்னியம்மன் கோயிலுக்குப் போய் பூ வெச்சுக் கேட்டு முடிவு பண்ணலாம்னு போனேன். இரண்டாவது தடவையும் பூ வெச்சுக் கேட்டோம்.'

'ம்......அப்ப என்னாச்சு?'

'செவப்புப் பூ வந்தா ருக்குமணியை நீ கட்டிக்க வேணும். வெள்ளைப் பூ வந்தா நான் கட்டிக்க வேணும். அப்படின்னு கேட்டோம். வெள்ளைப் பூத் தாண்ணா அப்பவும் வந்தது.'

'பின்னேக் கட்டிகிட்டு சொகமா இருக்கிறது தானே? இங்கே சாகறதுக்கு எதுக்கு இந்தப் புயலிலே வந்தாய்?'

'இல்லண்ணே, எனக்கு இரண்டாந் தடவை வாக்கு வந்ததுகூட சமாதானமில்லே. நீயும் கன்னியம்மன் கோவிலுக்கு வரவேணும். எல்லாருமா சேர்ந்து போய் இன்னொரு தடவை பூ வெச்சுக் கேட்டுப் பார்த்திடுவோம். அம்மன் அப்போ வாக்குக் கொடுக்கிறபடி சந்தோசமாகப் பண்ணிக்குவோம். நீயில்லாமெ கண்ணாலம் பண்ணிக்க எனக்கு மனசு கேட்கவே இல்லே.'

'நானு? நான்தான் இப்பவே அரை உசிராக் கிடக்கிறேன். இப்படியே கடலுக்குள்ளே போய்ட்டால் எனக்கு நிம்மதியாப் போகும்.'

'அண்ணே, நீ இப்படிச் சொல்லப்படாது. கடல்லே போனுல் ரண்டு பேருமாப் போய்டுவோம். பிழைச்சுக் குப்பத்துக்குப் போரதுன்னு உன்னை விட்டுட்டு நான் போகமாட்டேன். உன்னை விட்டுட்டுப் போகவா நன் இத்தனைக் கஷ்டப்பட்டு உன்னைத் தேடிக்கினு வந்தேன்? உனக்குக் கொடுக்கவேணும்னு அந்த ரொட்டித் துண்டைக்கூட நான் ரண்டு நாளா வாயிலே போடலேயே?'

காளி பதில் பேசவில்லை. அவன் உள்ளத்திலே மறுபடியும் போராட்டம். கங்கப்பனுடைய செயலும் பேச்சும் காளியின் மனத்தில் தடால்தடாலென்று மோதிக் கொண்டிருந்தன. அலைகள் கட்டுமரத்தை மோதின. கங்கப்பனுடைய செயலையோ பேச்சையோ காளி எதிர்பார்க்கவே இல்லை.

எங்கிருந்தோ ஒரு கட்டுமரம் ஆளில்லாமல் அலைகளிலே ஊசலாடிக்கொண்டு வந்தது. ஆலோசனையி லிருந்த காளி அதைக் கவனித்தான்.

'அதோ, அப்படித்தான் இந்தக் கட்டுமரமும் ஆளில்லாமல் இன்றைக்கோ நாளைக்கோ போகப் போறது' என்றுன் காளி. உள்ளக் குமுறல் தலை தூக்குகிறது.

'கடல் அடிச்சுக்கொண்டு போனுல் ரண்டு பேரையும் சேர்த்துத்தானே அடிச்சுக்கொண்டு போகும்? இத்தனை நாளாகப் பிரியாதவங்க சாகப் போறபோது

எதுக்குப் பிரியவேணும்? இந்த ஒரு வாரமாகப் பிரிஞ்சதே போதும்' என்று அமைதியாகக் கங்கப்பன் பேசினான். மாறாத அன்பேதான் பேசுகிறது.

'இப்போ தப்பிப் பிழைச்சுக் குப்பத்துக்குப் போனோம்னு வச்சுக்கோ; அங்கே போய் மறுபடியும் கன்னியம்மனை வாக்குக் கேக்கறோம்னு வச்சுக்கோ; வாக்கு எனக்குச் சாதகமா வந்துட்டா?' என்று காளி திடீரென்று கேட்டான்.

'எனக்கு முழுச் சம்மதந்தான். கொஞ்சங்கூட வருத்தமில்லை. ரண்டு பேருக்கும் ருக்குமணியைக் கட்டிக்க ஆசைதான். இருந்தாலும் கன்னியம்மன் வாக்குப்படிதான் முனியம்மா பண்ணுவாள். உனக்கு வாக்குக் கிடைச்சால் நீ பண்ணிக்கோ. எனக்குக் கிடைச்சாலும் நீ சந்தோசமா முன்னாலேநின்னு கண்ணாலத்தைப் பண்ணி வைக்கணும். நாம் எப்பவும்போல அண்ணன் தம்பியா இருக்கணும். உன்னை விரோதம் பண்ணிக்கினு எனக்குக் கண்ணாலமே வேண்டாம்.'

கங்கப்பன் பேச்சை முடிப்பதற்கு முன்னே காளி தீர்மானத்திற்கு வந்துவிட்டான். மூன்றும் முறை வாக்குக் கேட்க வேண்டியதில்லை என்று இப்பொழுது அவனுக்கு நிச்சயமாகிவிட்டது. கங்கப்பன் சூழ்ச்சியொன்றும் செய்யவில்லை என்று பூரணமாக அவனுக்கு விளங்கிப் போயிற்று. அவன் மனப்புயல் திடீரென்று ஓய்ந்துவிட்டது.

'தம்பீ, உன்னைக் காப்பாத்திக் குப்பத்துக்குக் கொண்டு போறதுதான் எனக்கு இப்போ கவலை. எங்கே துடுப்பை இப்படிக் கொடு. இந்தப் புயலை ஒரு கை பார்க்கிறேன்' என்றான் காளி.

அதே சமயத்தில் இந்தியக் கடற்படையைச் சேர்ந்த 'ராணு' என்னும் யுத்தக் கப்பல் அலைகளைப் பிளந்து கொண்டுவந்து திடீரென்று அருகிலே காட்சியளித்தது. கட்டுமரத்தில் கெட்டியாகக் கட்டப்பட்டிருந்த ஓலைப் பாய்ப் பறியை வெடுக்கென்று பிடுங்கி காளி அதைத் தலைக்குமேலே ஆவலோடு வீசிவீசிச் சமிக்கை செய்தான். பறிக்குள்ளிருந்த மற்றொரு ரொட்டி குழறும் அலைக ளிடையே விழுந்தது. அவர்களைக் கண்டு கொண்ட தாகக் கப்பலிலிருந்து பதில் சமிக்கை வந்தது.

'யுத்தக் கப்பல் இப்போது எப்படி இங்கே வந்தது?' என்று ஆச்சரியத்தோடு கேட்டான் கங்கப்பன்.

'நம்ம ராசாங்கத்திலேதான் அனுப்பியிருப்பார்கள். நம்ம முதல் மந்திரிக்கு ஏழை எளியவங்கன்னு இரக்க முண்டு' என்று நிச்சயத்தோடு பேசினன் காளி.

'அவர்கள் சொகமா இருக்க வேணும்' என்று கங்கப்பன் மனதார வாழ்த்தினன்.

'அவுங்க அனுப்பினலும் என் மனசிலே இருந்த அழுக்கு நீங்காதிருந்தா அந்தக் கப்பல் இந்தப் பக்கத் துக்கு வந்திருக்காது. நம்ம கடல் தெய்வம் கன்னியம்மன் அனுப்பமாட்டாள். அவள்தான் அந்த அரிவாளையும் உன் கண்ணுக்குப்படாமல் மறைத்திருப்பாள். இல்லா விட்டால் நீ என் பக்கத்திலே வந்து இப்படிப் பேசி என் அழுக்கை நீக்க முடியுமா?' என்று காளி சொல்லிக் கொண்டிருந்தான்.

அவன் சொல்லுவது கங்கப்பனுக்கு விளங்கவில்லை. ஏதோ பசி மயக்கத்திலே அண்ணன் பேசுகிருனென்று எண்ணிக்கொண்டான்.

# கேப்டன் பம்கின்ஸ்

அவன் கூறியதை யாரும் நம்பவில்லை. எப்படி நம்ப முடியும்? சொன்னதையெல்லாம் நம்புவதற்கு மனுதனுக்கு மூளையில்லையா என்ன? ராக்கெட் விமானத்திலே அவன் பறந்து சென்றதை நம்பலாம். அது மனிதனால் சுலபமாகச் செய்யக்கூடிய காரியம். அவன் போய்ச் சேர்ந்த கிரகத்தைப்பற்றிக்கூட நம்ப முடியும். அதுவும் மனிதனால் சாதிக்க முடியாததல்ல. ஆனால், அங்கு அவன் பார்த்த மக்களின் மனப்பண்பைப்பற்றிப் பேசும்போதுதான் சந்தேகம் நிச்சயமாக ஏற்படுகிறது. அந்த இடந்தான் கேப்டன் பம்கின்ஸின் மூளையின் நிலைமை பற்றி ஆலோசிக்க வேண்டிய இடம். மனிதனுடைய உன்னத ஸ்தானத்தையே இழிவுபடுத்தும் அந்த விஷயத்தை யார்தான் நம்ப முடியும்? பயித்தியக்காரன்கூட நம்பமாட்டான்.

கேப்டன் பம்கின்ஸ் கூறியதை எல்லோரும் ஒரு முகமாக அருவருப்போடு காதில் வாங்கிக்கொண்டார்களென்றாலும் அந்த விஷயம் ஒரு பெரிய கலகலப்பை உண்டுபண்ணிவிட்டது. பத்திரிகைகளுக்குப் புதுமாதிரியான நல்ல விருந்தாயிற்று. கொலை, கொள்ளை, சோரம் என்று இப்படியே நாள்தோறும் ஒரேமாதிரி பத்திரிகைச் செய்தியாகிய உணவை உண்டுண்டு அலுத்துப்போனவர்களுக்கு இந்தப் புதிய விருந்து எப்பொழுதாவது கிடைக்கும் வடுமாங்காய் ஊறுகாய்போலப் பெரிதும் திருப்தியளித்தது. அதைப்பற்றியே 'அமெரிக்கா முழுவதும் பேச்சாகிவிட்டது. கேப்டன் பம்கின்ஸின் மூளையின் நிலைமையைப்பற்றிச் சந்தேகமில்லாமல் எல்லோரும் ஏகமனதாக அபிப்பிராயம் கூறிவிட்டபடியால்தான் அவனை டெலிவிஷனில் வந்து பேசும்படி யாரும் கூப்பிடவில்லை. அவனை அப்படிப் பேசச் சொல்லுவதோ அல்லது அவனுடைய முகத்தை எல்லோரும் பார்க்கும்படி செய்வதோ மனித இனத்திற்கே பெருத்த அவமானம் என்பதனால்தான் இதுபோன்ற வம்புக் கலகலப்பிலேயே வாணிகம் செய்பவர்களுக்குத் தங்கள் விருப்பத்தை அடக்கிக்கொள்ள வேண்டியதாயிற்று. அவர்களுக்கும் மனித இனத்தில் பெருமையைப்பற்றி அத்தனை நிச்சயம் இருந்தது.

கேப்டன் பம்கின்ஸ் நல்ல மனிதன்தான். அவனுடைய குற்றமெல்லாம் தான் கண்டதை ஒளிக்காமல் கூறியதே. இந்த உலகத்திலே எத்தனையோ உண்மைகளை மறைத்து வைக்கவேண்டும் என்பதை அவன் முன்கூட்டியே அறிந்திருக்கவில்லை. இந்தப் பெரிய குறையிருந்தாலும் பரவாயில்லை ; அவனுக்குப்

புதிய புதிய ராக்கெட் விமானங்களை உண்டாக்கும் திறமையாவது இல்லாமலிருந்திருக்க வேண்டும். அந்தத் திறமையினால்தான் அவன் பயித்தியக்காரனானன். மூளைத் திறமையால் பயித்தியப் பட்டம் பெற்ற எத்தனையோ பேர்களின் வரிசையிலே அவனும் சேர வேண்டியதாயிற்று.

இப்படியெல்லாம் நேருமென்று தெரிந்திருந்தால் கேப்டன் பம்கின்ஸ் தனது முயற்சியையே ஆழக் குழி தோண்டிப் புதைத்திருப்பான். மனிதனுடைய மூளைக்கு எத்தனையோ பெருமையிருந்தும் பின்னல் வரப்போவதைத் தெரிந்துகொள்ளும் வல்லமை இல்லாதது ஒரு பெரிய குறைதான். இல்லை இல்லை—குறையென்று சொல்லிவிட்டேன்? தப்பு தப்பு. எண்ணிப் பார்க்காமல் ஏதோ வாய்க்கு வந்ததை உளறிவிட்ட குற்றத்திற்காக என்னையும் கேப்டன் பம்கின்ஸினுடைய வரிசையில் சேர்த்துவிடக்கூடாது என்று மன்றுடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். உண்மையில் நான் இந்த அதிகப் பிரசங்கம் செய்திருக்க வேண்டியதில்லை. கேப்டன் பம்கின்ஸின் விஷயத்தைக் கூற வந்தவன் அதை விட்டுவிட்டு வாயில் வந்ததையெல்லாம் பேசலாமா? மன்னித்துக் கொள்ளுங்கள். இனி அவனைப்பற்றி மட்டும் கூறிக்கொண்டு நிறுத்திக் கொள்கிறேன்.

கேப்டன் பம்கின்ஸ் தனது மூளைத் திறமையால் அமரத்துவம் எய்த ஆசை கொண்டான். யாரும் இது வரை சாதிக்காத ஒரு அருஞ்செயலைச் சாதித்துக் காட்ட வேண்டுமென்று அவன் துடித்தான். அவனுடைய புத்தமைப்புத் திறனும் அதற்கு உதவியாக இருக்கிறதென்று அவன் உறுதியாக நம்பினன்.

இந்த நம்பிக்கையின் தூண்டுதலால் அவன் ரகசிய மாகப் புதிய ராக்கெட் விமானம் ஒன்றைக் கட்டினன். 'செவ்வாய்க் கிரகத்திற்குப் போய்விட்டுத் திரும்பும் ஆற்றல் அந்த எந்திரத்துக்கு உண்டு. அவ்வளவு நீண்ட பிரயாணத்திலே என்னென்ன இடையூறுகள் ஏற்படக் கூடுமோ அவற்றையெல்லாம் எதிர்பார்த்து அவற்றைக் களைவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய் திருக்கிறேன். அதில் எள்ளளவும் சந்தேகமில்லை' என்று அவன் எனக்கு உறுதி கூறினன்.

கேப்டன் பம்கின்ஸ் என்னுடைய அந்தரங்க நண்ப ணகையால் அவனுடைய உயிருக்கு எவ்வித ஆபத்தும் நேரக் கூடாதென்று நான் கவலைப்பட்டது இயல்பு தானே? 'நீ கொஞ்சங்கூடக் கவலைப்படாதே. நான் செய்திருக்கும் ராக்கெட் அற்புதமானது; அதிநுட்ப மானது. எதிர்பாராமல் தோன்றும் நெருக்கடியான நிலைமையைக்கூடச் சமாளிக்க மனிதனுக்கு மனம் என்று ஒன்று இருப்பதுபோல் அதற்கும் ஒரு மனம் உண்டாக்கியிருக்கிறேன்' என்று அவன் எனக்குத் தைரியமூட்டினன். அவன் பேசுகின்ற தோரணையி லிருந்து எனக்கும் ஆறுதல் பிறந்தது.

அதனல் அவன் ஒரு நாள் இரவிலே மற்றவர் களுக்குத் தெரியாமல் தனது ராக்கெட்டில் புறப்பட்ட போது நான் தடை செய்யவில்லை. வானெலிக் கருவியின் மூலமாக எனக்கு அவ்வப்போது தகவல் அனுப்புவதாக வாக்களித்தான்; அதற்கு ரகசியமான ஒரு புதிய ஒலி அலை நீளத்தையும் உண்டாக்கி எனக்குத் தெரிவித்திருந் தான்.

எந்த நாளில் புறப்பட்டால் செவ்வாய்க் கிரகத்திற்கு எளிதில் சேர முடியும் என்பதைப் பற்றி ஆராய்ந்து அதற்குரிய நாள், மணி, நிமிஷம் எல்லாவற்றையும் பம்கின்ஸ் முன்னமேயே கணித்து வைத்திருந்தான். அதன்படியே அவன் ராக்கெட் வானை நோக்கிப் புறப்பட்டது. அமெரிக்காவில் நவாடா இராச்சியத்திலுள்ள பாலைவனத்தைச் சேர்ந்த ஓரிடத்திலிருந்து மூன்றும் பேருக்குத் தெரியாமல் இந்த முயற்சி நடந்தது. மின்னல் வேகத்தில் ராக்கெட் வானிலே பாய்ந்ததைக் கண்டு எனக்குக் கொஞ்சநஞ்சமிருந்த ஐயமும் பஞ்சாய்ப் பறந்துவிட்டது. என் நண்பன் நிச்சயம் தனது முயற்சியில் வெற்றியடைவான் என்று தைரியமடைந்தேன்.

நான் பாலைவனத்திலே தனியாக வானொலிப் பெட்டியை வைத்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருந்தேன். அரை மணிக்கொரு தடவை எனக்கு அதன் மூலம் சேதி வந்தது. பூமியைச் சுற்றியுள்ள காற்று மண்டலத்தையெல்லாம் கடந்து பரவெளியில் ராக்கெட் பாய்ந்துகொண்டிருந்தது. ‘எதிர்பார்த்தபடியே குறித்த காலத்தில் இப்பொழுது நான் ஒரே அந்தகாரமான இருள் மண்டலத்திலே புகுந்துகொண்டிருக்கிறேன். அடடா, இங்கிருந்து பூமியைப் பார்ப்பது எத்தனை ஆச்சரியம்!’ என்று ஒரு சேதி ஒலித்தது. அதுதான் கடைசியாக எனக்குக் கிடைத்த சேதி. அதற்கு மேலே பம்கின்ஸுடன் தொடர்பு அற்றுப் போய்விட்டது.

இப்படி நேருமென்று அவன் எச்சரிக்கவில்லை. அதனால் திடீரென்று எனக்குக் கவலையுண்டாயிற்று. பாலைவனத்திலேயே இரண்டு நாள் காத்துக் கிடந்தேன்.

என் வானொலிப் பெட்டியைப் பலவாறு திருப்பி வைத்து பார்த்தேன். ஒரு பயனும் ஏற்படவில்லை. உலகத்துச் சேதியெல்லாம் அதிலே கேட்டது ; எத்தனையோ பாஷைகளில் எத்தனையோ வகையான சங்கீதங்கள், காதைத் துளைக்கும் நாராசங்கள் எல்லாம் கேட்டன. ஆனால், பம்கின்ஸிடமிருந்து மட்டும் என்ன செய்தும் சேதி கிடைக்கவில்லை. அதனால், அந்தப் பாலைவனத்தை விட்டு வீடு போய்ச் சேர்ந்தேன். ஆனால், பம்கின்ஸ் நிலை பற்றி அறிந்துகொள்ளும் முயற்சியை மட்டும் விட வில்லை. அவனைப்பற்றி எங்கிருந்தாவது ஏதாவது தகவல் கிடைக்காதா என்று ஆவலோடு பத்திரிகை களையும், வானொலி ஒலிபரப்புக்களையும் துருவிக்கொண் டிருந்தேன். அவன் தன் முயற்சியில் தோல்வியுற்றிருந் தாலும் உலகத்தில் ஏதாவது ஒரு பாகத்தில் யாதொரு ஆபத்துமின்றி இறங்கியாவது இருப்பான் என்று நான் நம்பினேன்.

நான்காம் நாளன்று கலிபோர்னியா வானொலி நிலையம் அவனைப்பற்றிச் சுருக்கமாக ஒரு தகவலைப் பளிச்சிட்டது. 'பாரஷூட் வானக்குடையின் உதவி யால் ஒரு மனிதன் இங்கே இறங்கியிருக்கிறான். தரையை அடையும்போது அவனுக்குச் சரியான பிரக்ஞையில்லை. அக்கம் பக்கத்திலிருந்த மக்களின் உதவியால் அவன் உயிர் பிழைத்ததாகச் சொல்ல வேண்டும். பெயர் பம்கின்ஸாம். செவ்வாய் கிரகத்திற்குப் போய் வந்த தாக அவன் கூறுகிறான். மற்ற விபரங்கள் இன்னும் கிடைக்கவில்லை. அவன் பறந்து சென்றதாகக் கூறும் ராக்கெட்டையும் காணோம்' என்று சொன்ன அந்தத் தகவலைக் கேட்டதும் நான் துள்ளிக் குதித்தேன்.

உடனே ஒரு ஆகாய விமானத்தைத் தனியாக அமர்த்திக் கொண்டு கலிபோர்னியா போய்ச் சேர்ந்தேன்.

நான் கேப்டன் பம்கின்ஸை சந்திப்பதற்கு முன்னுலேயே நூற்றுக்கணக்கான பேர் அவனைக் கண்டு விஷயத்தை அறிந்துகொண்டார்கள். அவன் மூளை பழுதுற்றிருக்கிறது என்பதையும் ஐயமற முடிவு செய்துவிட்டார்கள். பத்திரிகை நிருபர்கள், வானொலி நிருபர்கள், சமூக சேவையில் தோய்ந்தவர்கள், விஞ்ஞானிகள், உயிரியல் தத்துவத்தில் அழுந்தியவர்கள், திடுக்கிடும் செய்தித் தரகர்கள், ஆண்கள், பெண்கள் எல்லோரும் கேப்டன் பம்கின்ஸைக் குறுக்கு விசாரணை செய்து முடித்துவிட்டார்கள்.

தனிமையில் அவனைச் சந்திக்கவே முடியாதோ என்று ஆகிவிட்டது எனக்கு. கடைசியில் எப்படியோ அதைச் சமாளித்தேன். கேப்டன் பம்கின்ஸும் என்னிடம் தனியாகப் பேச விரும்பினுன். நான் ஒருவனுவது அவன் கூறுவதை உண்மையென்று நம்புவேனென்று நினைத்திருக்கலாம்.

ஆனுல், அதுவரையில் ஏற்பட்டிருந்த ஏமாற்றத்தால் பாதிக்கப்பட்ட அவன் முதலில் என்னிடத்திலும் எச்சரிக்கையோடுதான் பேச்சைத் தொடங்கினுன். ‘ உண்மையைச் சொல்லி எனக்குக் கிடைத்த பட்டம் போதும். இனிமேல் யாரிடமும் அதைப்பற்றி நான் பேசப் போவதில்லை ’ என்று அவன் சோர்வோடு பேசினுன்.

‘ பம்கின்ஸ், என்னை உனக்குத் தெரியாதா ? நான் உன்னுடைய உயிர் நண்பனல்லவா ? என்னிடம் நீ

நீ இப்படிப் பேசலாமா ?' என்று நான் வருத்தத்தோடு கூறினேன்.

'நான் உண்மைதான் பேசுகிறேனென்று நீ மாத்திரம் எப்படி நம்பப் போகிறாய் ?'

'யார் என்ன சந்தேகித்தாலும் உன்னைப்பற்றி நான் சந்தேகப்படமாட்டேன். நம்முடைய சிநேகத்தின் மேல் ஆணை. நீ கண்டதை ஒளிக்காமல் சொல்' என்று ஆத்திரம் கலந்த குரலில் நான் உரத்துக் கூவினேன்.

கேப்டன் பம்கின்ஸுக்குக் கொஞ்சம் உற்சாகம் பிறந்தது. விஷயத்தைச் சொல்லலானான்.

'நான் செவ்வாய்க்கு எவ்விதமான இடையூறுமில்லாமல் போய்ச் சேர்ந்தேன். எனது ராக்கெட் நான் எதிர்பார்த்தபடியே முற்றிலும் ஒழுங்காக வேலை செய்தது.'

'எனக்குச் சேதி அனுப்புவது திடீரென்று நின்றுவிட்டதே ?' என்று நான் குறுக்கிட்டேன்.

'ஆமாம், அந்த ஒரு விஷயத்தில்தான் எனது எந்திரம் கோளாறடைந்துவிட்டது. அதுவும் என்னுடைய அஜாக்கிரதையால் ஏற்பட்டதுதான். செவ்வாய் மண்டலத்தை அடையப்போகிற குதூகலத்தில் மனிதனுடைய மூளையின் சாதனைகளைப்பற்றி நான் ஒரேயடியாகப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்துவிட்டேன். அந்த நேரத்தில் இந்தத் தவறு நேர்ந்துவிட்டது. அது எனது அகம்பாவத்தின் மண்டையிலே நல்ல அடிதான். ஆனால், அதைவிடப் பெரிய அடி

செவ்வாயிலே காத்திருந்தது. நான் அங்கே எனது ராக்கெட்டை விட்டு இறங்கும்போது நம்மைப்போன்ற ஒருவகை மனிதக் கூட்டத்தைக் காண முடியுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், அழகே வடிவமான மக்களை அங்கே கண்டேன். அவர்களுடைய மேனி அழகைக் கண்டு அதனால் நான் அவர்களை உயர்வாக மதிக்கவில்லை. வடிவத்திலே அழகும் கவிதைத் தன்மையுமிருந்தாலும் அவர்களெல்லாம் அறிவிலே மனிதனுக்குப் பக்கத்தில் வர முடியாது என்றுதான் நிச்சயித்துக் கொண்டேன். நான் செவ்வாய்க்குப் போனதைப்போல அவர்களால் நமது பூமிக்கு வர முடியுமா? ஏதோ பரிணாம வரிசையிலே மனிதனுக்குக் கீழே வெகு தூரத்தில் இருக்கும் பிறவிகள் என்றுதான் அவர்களைக் கருதினேன்.'

'பின்னே வேறு எப்படித்தான் இருக்க முடியும்? மனிதனுக்கு இணையாகச் சிருஷ்டியிலே யாராவது இருக்க முடியுமா? உன்னுடைய சாதனையே அதற்கு உதாரணம்' என்று நான் பேசத் தொடங்கினேன். எனது உற்சாகத்தையும், மனித சமூகத்தின்மேல் எனக்கிருந்த அசைக்க முடியாத பெருமையையும் அதற்குமேல் என்னால் அடக்கிவைக்க முடியவில்லை.

இப்படி நான் கூறியதும் அவன் முகம் களையிழக்கலாயிற்று.

'நண்பா, நான் மனம்விட்டுப் பேசலாமா?' என்று அவன் தயக்கத்தோடு கேட்டான்.

'தாராளமாகப் பேசு. என்னிடம் உனக்கேன் இத்தனை தயக்கம்? உலகமே உன்னை எதிர்த்தாலும்

நான் உன் பக்கத்திலிருப்பேன், என்பது உனக்குத் தெரியாதா ?' என்று கர்ஜித்தேன் நான்.

'நண்பா, மனிதனுடைய உன்னத நிலைமைபற்றி நானும் உன்னைப்போலத்தான் நினைத்துக்கொண்டு அவர்களைச் சந்தித்தேன். ஆனால், அந்த எண்ணம் வெகு சீக்கிரத்தில் தவிடு பொடியாகிவிட்டது. அதைப்பற்றி இங்கே எல்லோரிடமும் சொன்னதுதான் விபரீதமாக முடிந்தது.'

'இந்தப் பைத்தியங்கள், சொல்லுவதைப்பற்றி நீ கவலைப்படாதே. நான் உன்னை ஆதரிக்கிறேன். செவ்வாய் மக்களைப் போட்டோ எடுத்து வந்திருக் கிறாயா ?'

'அதற்கெல்லாம் எனக்கு அவர்கள் அவகாசம் கொடுக்கவில்லை. ஆகா, என்ன அற்புதமான பிறவிகள் அவர்கள் ! அவர்கள் நம்மைப்போலப் பேசுவதே இல்லை. பாடுவதற்கும் சிரிப்பதற்குந்தான் அவர்கள் வாயைத் திறக்கிறார்கள். அடடா, என்ன பாட்டு ! என்ன சிரிப்பு ! என்னை மட்டும் அங்கேயே இருக்க அவர்கள் அனுமதி கொடுத்திருந்தால்......'

'பேசுவதே இல்லையா ? அப்போ அவர்கள் நம் பூமியில் உள்ள விலங்குகளுக்குச் சமானமானவர்கள் தான். குயில் பாடுவதைப்போலப் பாடுகிறார்கள் போலிருக்கிறது ?' என்று நான் எனது மூளையின் மின்னல் வேக முடிவு காணுந் திறமையை விரித்தேன்.

'அதுதானில்லை. நீ நினைக்கிறது முற்றிலும் தவறு. பாடுவதற்கும், சிரிப்பதற்கும், முத்தம் கொஞ்சு

வதற்குந்தான் வாயைப் பயன்படுத்த வேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. இதை அங்கிருந்த ஒரு பெண்ணே என்னிடம் வாய் திறந்து கூறினாள்.'

'அதெப்படி முடிந்தது? பேச முடிந்தாலும் உனக்குப் புரியும்படியான பாஷையில் அவள் எப்படிச் சொன்னாள்?'

'அதுதான் எனக்கும் ஆச்சரியம். என்னை அங்கே இரண்டு மணிநேரத்திற்கு மேல் அவர்கள் தங்கவிடவில்லை. அதற்குள் சபைகூட்டி என்னை நம்உலகத்திற்குத் திருப்பி அனுப்பிவிட வேண்டுமென்று முடிவு செய்து விட்டார்கள். நம் நாட்டில் என்றால் இந்தத் தீர்மானத்திற்குவருவதற்கு எத்தனையோ மாதங்கள் ஆகியிருக்கும். ஆளும் கட்சி, எதிர்க்கட்சி, குரு பீடம் ஆகிய எல்லாப் பகுதிகளிலிருந்தும் அபிப்பிராயங்களையெல்லாம் தெரிந்து முடிவு செய்வதென்றால் இங்கே சுலபமான காரியமா? இவற்றிற்கு மேலே ஐக்கிய நாட்டு ஸ்தாபனத்திலே வேறு பேசித் தீர்க்க வேண்டும்.' இப்படி அவன் பேசிக் கொண்டே போனான்.

'நான் கேட்ட கேள்வியை மறந்துவிட்டாயே?' என்று நான் குறுக்கிட்டேன்.

'கேட்ட கேள்விக்கு நேரடியான பதில் சொல்லலாமா? அது நமது மரபுக்கு உகந்ததல்லவே?'

'கேப்டன் பம்கின்ஸ், விளையாடாதே. சீக்கிரம் விஷயத்தைச் சொல். நான் வெளியிலே காத்திருக்கிறவர்களிடம் உண்மையை விளக்கி அவர்கள் சந்தேகத்தை உடனே போக்கியாக வேண்டும். உலகப் பத்திரிகை

களிலெல்லாம் உன்னைப்பற்றி வீண் அவதூறான செய்தி வரக்கூடாது.'

செவ்வாய்க் கிரகத்தில் சாதாரணமாக அவர்கள் பேசுவதில்லையென்றாலும் எனக்குப் புரியும்படி விஷயத்தை எனக்குச் சொல்லுவதற்காக ஒருத்தியைப் பேசும்படி ஏற்பாடு செய்தார்கள். அவள் ஒரு மணி நேரத்திலே போதுமான ஆங்கிலம் தெரிந்துகொண்டு என்னோடு பேசத் தொடங்கிவிட்டாள். அத்தனை மூளைத் திறமை அவர்களுக்கு இருக்கிறது. ஒரு பொருளை அவள் தொட்டுக் காண்பிப்பாள். நான் அதற்கு ஆங்கிலத்தில் பெயர் சொல்லுவேன். ஓடிக்காண்பிப்பாள் ; நடந்து காண்பிப்பாள். அப்படிச் செய்வதற்கு நமது பாஷையில் நாம் என்ன கூறுகிறோம் என்பதைச் சொல்லுவேன். உடனே அவள் தெரிந்து கொள்ளுவாள். இப்படித் தெரிந்து கொண்டு பிறகு பேசவும் செய்தாள்.

'சரி சரி, கிளிப்பிள்ளை மாதிரி பேசினுளாக்கும் ? ஆனால், அந்தப் பேசாமடைந்தைகள் தங்கள் சபையிலே எப்படித் தீர்மானம் பண்ணினார்கள் ? நமது சபைகளிலே பேச்சொன்றுதானே நம்முடைய வல்லமை ?'

'அவர்கள் எல்லோரும் சபைக்கு வந்தார்கள். வரும்போது இனிமையாகப் பாடிக்கொண்டும் சிரித்துக் கொண்டும் வந்தார்கள். ஆண்களும் பெண்களும் வந்து உட்கார்ந்து பத்து நிமிஷமிருக்கும். யாரும் பேசவே இல்லை. ஒருவரை ஒருவர் சில சமயங்களில் பார்த்துக் கொண்டார்கள். என்னையும் அடிக்கடி கவனித்தார்கள். பிறகு எழுந்து போய்விட்டார்கள். அவர்கள் தீர்மானம்

செய்தாகிவிட்டது. போகும்போது பாடிக்கொண்டே போனார்கள்.'

"பிறகு எப்படித் தீர்மானம் செய்தார்கள்? அவர்கள் தான் பேசவே இல்லையே?"

"அதுதான் விஷயம். அவர்கள் நம்மைப்போலப் பேசிப்பேசி ஒருவருடைய உள்ளத்தை மற்றொருவர் தெரிந்துகொள்வதில்லை. அது பரிணாமத்திலே தாழ்ந்த நிலைமை என்று நினைக்கிறார்கள். பேச்சின் மூலம் கருத்தை வெளிப்படுத்துவதானால் உள்ளே ஒன்றை வைத்துப் புறத்தில் வேறொன்றைச் சொல்ல முடியும். அதனாலேதான் எல்லா விபரீதங்களும், பூசலும், போரும் ஏற்படுகின்றன என்பது அவர்களுடைய எண்ணம்."

"பிறகு அவர்கள் எப்படித்தான் ஒருவரையொருவர் தெரிந்து கொள்கிறார்கள்?" என்று சற்றுப் பொறுமையிழந்து கேட்டேன்.

"அவர்களில் ஒருவர் நினைப்பதை மற்றொருவர் அப்படியே உணர்ந்துகொள்ளுகிறார்கள். வார்த்தையால் எண்ணத்தைச் சொல்லவேண்டியதே இல்லை. உள்ளமும் உள்ளமும் உணர்ந்துகொள்கின்றன. அந்த உயர் நிலைமையை அவர்கள் எய்தியிருப்பதால், பேச்சுக்கு இடமில்லை. அதுமட்டுமல்ல. உள்ளொன்று வைத்துப் புறமொன்று கூற சந்தர்ப்பமே அங்கே கிடையாது."

"அப்படியானால் அது நரகமாகத்தானிருக்கும். ஒருவர் நினைப்பதையெல்லாம் மற்றொருவர் அப்படியே தெரிந்துகொண்டால் உலகம் நிலைக்குமா?"

"ஏன் நிலைக்காது? அந்த நிலையிலே உள்ளமே மாறியமைந்திருக்கும். குரோதமும், கபடமும், காமமும்

அதில் தோன்றலே தோன்ருது. உலகம் இன்பலோக மாகிவிடும்'' என்று பம்கின்ஸ் வானவெளியை வெறித் துப் பார்த்துக்கொண்டு கூறினான்.

"அவர்கள் ஒருவரையொருவர் தெரிந்து கொள்ளும் வகையெல்லாம் உனக்கெப்படித் தெரிந்தது?'' என்று நான் சந்தேகத்தோடு கேட்டேன்.

"அதைப்பற்றியெல்லாம் அந்த மங்கைதான் எனக்குத் தெளிவு படுத்தினாள். என்னை என் ராக்கெட் டிலேயே வைத்துத் திருப்பி அனுப்ப முடிவு செய்து விட்டார்கள். அதில் என்னவோ, சில மாறுதல்கள் செய்துவிட்டு அந்த மங்கை, 'இந்த ராக்கெட் பூமியி லுள்ள வாயுமண்டலத்தில் நுழைந்ததும் வெடித்துப் போகும். ஆனால், உனக்குத் தீங்கு நேராது. நீ கொண்டுவந்துள்ள பாரஷூட்டின் மூலமாகவே நீ உனது நாட்டில் இறங்க ஏற்பாடு செய்திருக்கிறேன்' என்று அவள் சொன்னாள்.''

"நான் திரும்பும்போதாவது அவளுடைய கையைப் பிடித்துக் குலுக்க வேண்டுமென்று ஆசைப்பட்டேன். நம் நாட்டு வழக்கத்தையும் தெரிவித்தேன். ஆகா! பூப் போன்ற கைகள் என்று சொல்லுகிருேமே இங்கே சொல்லுவதெல்லாம் வெறும் பேச்சு. அவள் கைகள் தான் உண்மையில் பூப்போன்றவை. ஆனால், அவற் றைத் தீண்டும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. என் உள்ளத்தை அவள் அப்படியே கண்டுகொண்ட தால் கைகுலுக்க மறுத்துவிட்டாள். 'உன்னுடைய உணர்ச்சிகளோடு என்னைத் தொட்டால் உன் கை

என்னைச் சுட்டுவிடும்' என்று இளநகையோடுதான் சொன்னாள். அந்த நிலையிலும் வெறுப்பே இல்லை. அன்புதான் அந்த இளஞ் சிரிப்பில் தவழ்ந்தது."

எனக்கு எரிச்சலுண்டாயிற்று.

"உன்னை எதற்காகத் திருப்பி அனுப்பத் தீர்மானித்தார்கள்? இங்கு அப்படி யாராவது வந்திருந்தால் நமது கண்காட்சிசாலையிலாவது வைத்திருக்காமல் விடுவோமா?" என்று கோபத்தோடு கேட்டேன்.

"மனவளர்ச்சியில் மிகவும் கீழ் நிலையிலிருக்கும் மனித இனத்தைச் சேர்ந்த ஒருவனை அங்கு விட்டு வைப்பது நல்லதல்ல என்பது அவர்கள் கருத்து. அங்கே காட்சி சாலை இல்லை; சிறையில்லை. அதனால் என்னை எதேச்சையாகத்தான் அவர்கள் விடவேண்டி வரும். அப்படி விடுவது உசிதமல்ல என்று முடிவு கட்டி விட்டார்கள்."

இதைக் கேட்ட பிறகுதான் நானும் கேப்டன் பம்கின்ஸின் மனநிலையைப் பற்றிச் சந்தேகமடைந்தேன். மனிதனைவிட மனவளர்ச்சியிலும் மூளையிலும் சிறந்த பிறவி இருக்க முடியுமா? இருக்கவே இருக்காது. இவன் கூறுவதெல்லாம் அபத்தம். ராக்கெட் விமானம் கொஞ்ச தூரம் போனதும் வெடித்திருக்கும். இவன் பாரஷூட்டின் உதவியால் இறங்கியிருக்கிறான். ராக்கெட் வெடித்த அதிர்ச்சியிலே மூளைக் கோளாறு ஏற்பட்டிருக்கிறது; இதுதான் விஷயம் என்று நான் மற்றவர்களுடைய தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்தேன். அதை வெளிப்படையாகச் சொல்லவும் தயங்கவில்லை. சிநேகம் பெரியதுதான். ஆனால், மனிதனுடைய மூளையின் பெருமை அதைவிடப் பெரியதல்லவா?

# மாவிளக்கு

“வள்ளியாத்தா, வந்துவிட்டாயா? மாவிளக்கு எங்கே?” என்று ஆவலோடு கேட்டாள் கிழவி முத்தம்மாள்.

“இதோ கொண்டு வந்திருக்கிறேன். ஏனம்மா இருட்டிலேயே உட்கார்ந்திருக்கிறாய்? யாருமே இந்தப் பக்கம் வரவில்லையா?”

“யாரும் வரவில்லை. வந்திருந்தால் விளக்கேத்தி வைக்கச் சொல்லியிருப்பேன். எல்லோரும் உன்னைப் போலக் கோயிலுக்குப் போயிருப்பார்கள். மாவிளக்கு அணையாமல் வந்திருக்குதா? அதை எனக்குச் சொல்லு. வீட்டு விளக்கைப் பிறகு கவனிக்கலாம்.”

“அம்மா, மாரியாத்தாள் கோயிலிலே கூட்டம் சொல்ல முடியாது” என்று வள்ளியாத்தாள் கோயில் காட்சியை விவரிக்கத் தொடங்கினாள். கேட்ட கேள்விக்குப் பதில் கொடுக்கவில்லை.

அவள் கூறி முடிப்பதற்குள் அவளுடைய மகள் லக்ஷ்மி பேசப்புகுந்து விட்டாள். அவளுக்கு ஆறு வயதிருக்கும்.

"பாட்டி, எங்கே பார்த்தாலும் மாவிளக்காகவே இருந்தது. அப்பா! எத்தனை மாவிளக்கு!" என்று அந்தக் குழந்தை தனது ஆச்சரியத்தைச் சொல்லிலும் குரலிலும் வெளிப்படுத்தியது.

"வள்ளியாத்தா, நீ. கொண்டுபோன மாவிளக்கு அணையாமல் வீட்டுக்குள்ளே வந்து சேர்ந்ததா?" என்று அந்தக் கேள்வியையே கிழவி மறுபடியும் கேட்டாள்.

"ஆமாமம்மா, அணையாமல்தான் இருக்குது."

"இல்லே பாட்டி, அம்மா......" என்று குழந்தை குறுக்கிட்டுப் பேச வாயெடுத்தது.

வள்ளியாத்தாள் சட்டென்று குழந்தையை வாயடக்க முயன்றாள். கையிலே ஜாடை காட்டினாள். கண்களை உருட்டி மிரட்டி விழித்தாள். வாய் மேலே கையை வைத்துப் பேசாதிருக்கும்படி எச்சரிக்கை செய்தாள்.

குழந்தை சடக்கென்று பேச்சை நிறுத்திக் கொண்டது. அம்மாள் இப்படி முகத்தை வைத்துக் கொண்டதை அந்தக் குழந்தை இதுவரை பார்த்ததில்லை.

"அம்மா, ஒரு ஆயிரம் இரண்டாயிரம் மாவிளக்கு வந்திருக்கும். பக்கத்தூரெல்லாம் அப்படியே திரண்டு வந்துவிட்டது" என்று வள்ளியாத்தாள் பேச்சை ஓட்டினாள்.

“ போன இருபது வருசமாக நானும் இந்தக் கூட்டத்தைப் பார்த்திருக்கிறேன். மாரியாத்தாளுக்கு வருசத்துக்கு ஒரு தடவை மாவிளக்கு எடுக்கிறதுன்னு, எல்லோருக்கும் அதிலே ஆசைதான். இந்த வருசந்தான் நானே மாவிளக்கு எடுக்க முடியவில்லை. நல்ல வேளையா நீயே பட்டணத்திலிருந்து வந்துவிட்டாய். இனிமேலே ஒவ்வொரு வருசமும் இந்தக் காரியத்தை எனக்காக நீதான் பண்ணவேணும்.”

“ அடுத்த வருசத்திலே நீயே மாவிளக்கு எடுக்கலாமம்மா ? ஒரு சின்ன ஆப்பரேசன் செய்து விட்டால் கண்ரண்டும் மறுபடியும் நல்லாத் தெரியுமாம். அவர்கள் உன்னைப் பட்டணத்துக்குக் கூட்டிக்கொண்டு போகத்தான் வந்திருக்காங்க.”

“ அதெல்லாம் இனி எதுக்கு, வள்ளியாத்தா ? என் காரியம் முடிஞ்சு போச்சு. இந்த மாவிளக்கோடு சரி.”

“ அப்படிச் சொல்லாதே, அம்மா. உனக்கு இப்போ என்ன வந்துவிட்டது ? கண்ணிலே படலம் மறைச்சு இருக்குது. அதை நீக்கிவிட்டால் கண் நல்லாத் தெரியும். அப்புறம் தொந்தரவே இல்லை.”

“ கண்ணைப் பற்றி என்ன ? நான் சொல்வது அதல்ல. குழந்தைக்கு முன்னாலே அதையெல்லாம் பேசப்படாது. இருந்தாலும் உனக்குத் தெரிஞ்சிருக்கும்.”

“ அம்மா, மாவிளக்கு அணையாமல்தான் வீட்டுக்கு வந்தது.”

“ வள்ளியாத்தா, எனக்கு நீ ஒரு வாக்குக் கொடுப்பாயா ?”

"அதென்ன வாக்கு? நீ சொல்றதை என்னிக்காவது நான் தட்டி நடந்ததுண்டா?"

"அப்படி நடக்கமாட்டாய், அது எனக்கு நல்லாத் தெரியும். இனிமேல் வருசம் தவருமல் நீ மாரியாத்தா நோன்புக்கு நம் ஊருக்கு வந்து மாவிளக்கு எடுக்க வேணும். வருவாயா?"

"நான் கட்டாயமாக வருவேன். நீயும் நானுமாக மா விளக்கு எடுக்கலாம். சரிதானே?"

"என்னை விட்டுப் பேசு. நீ எனக்காக இதைச் செய்வாயா?"

லக்ஷ்மிக்கு சும்மா இருக்கமுடியவில்லை. அம்மாளும் பாட்டியும் பேசிக் கொள்வது முற்றிலும் அவளுக்கு விளங்காவிட்டாலும் பாட்டி கேட்கிற கேள்விக்கு நிச்சயமான பதில் கொடுக்க வேண்டுமென்று அவளுடைய இள உள்ளத்திலே பட்டது.

"பாட்டி, நான் வந்து மா விளக்கு எடுக்கிறேன், பாட்டி. அம்மா வராமல் போனாலும் நான் வருவேன்."

கிழவிக்குப் பூரிப்புத் தாங்க முடியவில்லை. கொஞ்சம் முன்னாலே மனத்திலே உதயமான எண்ணங்களையெல்லாம் அவள் மறந்துவிட்டாள்.

"இப்படி வாம்மா, கண்ணு" என்று சொல்லிக் கொண்டே கையை நீட்டினாள். குழந்தை அவளருகே சென்றது. அவள் லக்ஷ்மியை உச்சி முதல் உள்ளங்கால் வரையில் இரண்டு கைகளாலும் தடவிப் பார்த்துப் புளகாங்கிதமடைந்தாள்.

"கண்ணு, நீயுந்தான் அம்மாவோடு சேர்ந்து மாவிளக்கு எடுக்க வேணும். நீ எடுக்கிறதுதான்

எனக்கு மோட்ச விளக்கு" என்று தழுதழுத்த குரலில் சொன்னாள்.

"மோட்ச விளக்கா? இல்லே பாட்டி. நான் மாவிளக்கு எடுக்கிறேன்."

"அதுதானம்மா எனக்கு மோட்ச விளக்கு."

"பாட்டீ, நீயும் அம்மாளைப் போலவே பேசறயே? மோட்ச விளக்குன்னு எனக்குத் தெரியாதா? அன்னைக்கு மேற்காலே வீட்டுப் பெரிய தாத்தா செத்துப் போனாரே, அவருக்குக் காவிரியிலே மோட்ச விளக்கு விட்டாங்களே நானே பார்த்தேனே—அது உனக்கு வேண்டாம், நீ சாகப்படாது பாட்டி."

"இல்லம்மா, கண்ணு. நான் சும்மா சொன்னேன். நீ மாவிளக்கு எடுத்தால் அதுவே எனக்குப் போதும்." என்று சொல்லிக் குழந்தையைக் கட்டி அணைத்துக் கொண்டாள்.

"வள்ளியாத்தா, ரொம்ப நேரமாய்ட்டுதே? லக்ஷ்மிக்குச் சோறு போடு—அவள் தூங்கிப் போவாள்."

"பாட்டீ, நான் உன்னோடுதான் சாப்பிடுவேன்."

"இன்னைக்கு நான் விரதம் கண்ணு—சாப்பிட மாட்டேன். நீ போய் அப்பாவோடு சாப்பிடு."

வள்ளியாத்தாள் விளக்கேற்றி வைத்துவிட்டு லக்ஷ்மியைக் கூட்டிக்கொண்டு போய்விட்டாள். முத்தம்மாள் தனியாக உட்கார்ந்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள். சென்றுபோன கால் நூற்றாண்டில் அவள் வாழ்க்கையிலே நடந்த முக்கியமான சம்பவங்களெல்லாம் அவள் மனக் கண் முன்பு திரைப்படக் காட்சி போல வந்து கொண்டிருந்தன.

"என் குழந்தைகள் நாலும் இருந்திருந்தாலும் இத்தனை அன்போடு இருந்திருக்குமா? சந்தேகந்தான். அப்பனைப் போல அவைகளும் ஆயிருக்குமோ என்னவோ? ம்......அதெல்லாம் இப்போ எதுக்கு நினைக்கவேணும்? வள்ளியாத்தாளும் இந்தக் குழந்தை லக்ஷ்மியும் மாரியாத்தா தயவிலே சுகமாக இருந்தால் போதும். மாரியாத்தாதான் வள்ளியாத்தாளை அன்றைக்குக் காப்பாத்தினுள். அவளும் சிறு வயதிலே இறந்திருந்தால் ஊராரெல்லாம் என்னை எப்படிக் கேவலமாகப் பேசியிருப்பார்கள். வள்ளியாத்தாளுக்கு உடம்பு சரியில்லேங்கற போதே பேச ஆரம்பிச்சுட்டாங்களே. நாலு பிள்ளையைத் தின்றவள் இதை வளர்க்கிருள்; அவள் கையிலே இதுவும் பிழைக்கவா போகுதுன்னு என் காதிலே விழும்படி பேசினுர்கள். மாரியாத்தாதான் காப்பாத்தினுள். நான் உயிரோடிருக்கிற வரையிலே என் கையாலே நான் சம்பாதிச்ச பணத்தைக் கொண்டு மாரியாத்தாளுக்கு மாவிளக்கு எடுக்கிறேன்னு வேண்டிக்கிட்டேன். அந்த வேண்டுதலே வீண்போகலே. வள்ளியாத்தாளை ஆறுமாதக் குழந்தையிலேயே விட்டு விட்டு அந்த அம்மா செத்துப் போய்விட்டாள். நானே அவளுக்குத் தாயாக இருந்தேன். அதைப்பற்றி ஊரிலே என்னன்னமோ பேச்சுக்கூட வந்தது. அவங்ககூடச் சந்தேகப்பட்டாங்க; குடிச்சுட்டு வந்து அடி அடின்னு அடிச்சாங்க. ம்...குடிக்கிற புருசனிடம் வாழறதானுல் அப்படித்தான். இருந்தாலும் அவங்க நல்லவங்கதான். பிறந்த நாலு குழந்தையும் போய்ட்டுதேன்னுதான் அவங்களுக்கு என்மேலே கோவம். வள்ளியாத்தாளை அவங்களுக்கு ஏனோ பிடிக்கவே இல்லே. கடைசியிலே

குடிச்சே உயிரை விட்டாங்க. பண்ணைக்காரர் ரொம்ப நல்ல மனசு. தங்கமுன்னு தங்கம் அவங்கதான். என் வீட்டுக்காரர் குடிவெறியிலே கன்னாப்பின்னான்னு பேசறதைக் கூடப் பொறுத்துக்குவாங்க. அவங்க குணத்துக்கு ஏத்தமாதிரியே நல்ல பெண்ணு வள்ளியாத்தாள் பிறந்தாள். வள்ளியாத்தாளை நான் என் பிள்ளைமாதிரியே வளர்த்ததைப் பண்ணைக்காரர் மறக்கவில்லை. இல்லாது போனால் இப்போ நான் எத்தனை சங்கடப்பட வேணுமோ? நல்ல வேளையாக வள்ளியாத்தாளுக்குப் பிடிச்ச புருசன் வந்து சேர்ந்தான். பட்டணத்திலே வேலை. வள்ளியாத்தா காட்டுப்பாளையத்திலே என் கூடவே இருந்தால் எனக்கு சந்தோசமாகத்தான் இருக்கும். ஆனால், அவள் எங்கிருந்தாலும் சுகமா இருந்தாப் போதும். இனிமேல் அதைப் பத்தி என்ன? என் காரியந்தான் முடியப்போகுது." இப்படி யெல்லாம் நினைத்துக் கொண்டே முத்தம்மாள் காலை நீட்டி உட்கார்ந்திருந்தாள்.

"அம்மா, இன்றைக்கு நீ விரதமானாலும் விளக்கு மாவு மட்டும் கொஞ்சம் சாப்பிடறயா? மாரியாத்தாளுக்குப் படைத்தது" என்று கூறிக் கொண்டே வள்ளியாத்தாள் வேகமாகத் திரும்பி வந்தாள்.

"ஒரு துளி கொண்டாம்மா" என்றாள் முத்தம்மாள்.

"அம்மா, உன்னை ஒண்ணு கேட்கிறேன், சொல்லுவாயா?" என்று கேட்டுக் கொண்டே வள்ளியாத்தாள் இலையைப் போட்டு அதில் விளக்குமாவை வைத்தாள்.

"என்ன அப்படி அதிசயம் கேட்கப் போகிறாய்?"

" இந்த விளக்குமாவைப் பண்ண நீயே வயலுக்குப் போய் அங்கே உதிர்ந்து கிடக்கிற நெல்லையெல்லாம் உன் கையாலேயே துழாவித் துழாவி எடுத்து வந்தாயாமே, அது நிஜமா ?"

" ஆமா, அதற்கென்ன ?"

" ஏம்மா, வீட்டிலே நெல் இல்லையா என்ன ? அப்பாவிடம் கேட்டால் கொடுக்கமாட்டாரா ?"

" அப்பா கொடுக்காமலா எனக்கு இப்போ சோறு கிடைக்குது ? ஆனல், மாவிளக்குப் பண்ண அந்த நெல் உதவாது."

" ஏம்மா உதவாது ? அதைத்தான் எனக்குச் சொல்லவேணும்."

" நானே வேலை செய்து சம்பாதிச்சு நெல்லு வாங்கி அதைக் குத்தி அரிசி பண்ணவேணும். நானே இடிச்சு மாவாக்க வேணும். அதிலே மாவிளக்குப் பண்ணி மாரியாத்தாள் கோயிலுக்குக் கொண்டு போக வேணும். வியாதி யெல்லாம் நீங்கி நீ உயிர்பிழைச்சு எழுந்தால் இப்படிச் செய்யறேன்னு மாரியாத்தாளை அப்போ நீ குழந்தையாக இருந்தபோது வேண்டிக்கிட்டேன். போன வருசம் வரையிலும் கண்ணுத் தெரிஞ்சுது. பண்ணைக்காரர் வேண்டாம் வேண்டாமுன்னு சொன்னலும் நான் கூலிக்குப் போய் பணம் சம்பாதிச்சு மாவிளக்கு எடுத்தேன். இந்த வருசம் என்ன பண்ணறதுன்னு எனக்கு விசனமாக இருந்தது. கடைசியிலே இந்த யோசனை வந்தது. வயலிலே நெல் அறுவடை காலத்தில் எத்தனையோ பேர் வேலை செய்ய முடியாத கிழவிகள் வந்து

அங்கே நிலத்தில் உதிர்ந்து விழுந்து கிடக்கிற நெல்லைப் பொறுக்கி எடுத்துப் போவார்கள். அதை நான் பார்த்திருக்கிறேன். நானும் இந்த விசை அப்படிப் பண்ணினேன்."

இதைக் கேட்கிற போது வள்ளியாத்தாளுக்குக் கண்ணீர் பிதுங்கிக் கொண்டு வந்தது. இப்படி ஒரு தாய் தனக்குக் கிடைத்ததைப் பற்றி அவள் உடல் பூரித்தாள்.

முத்தம்மாளுக்குச் சொந்த ஊர் காங்கயம். அங்கே தொடர்ந்தாற்போல் ஐந்தாறு வருஷம் மழை பெய்யாததால் கூலி வேலை கூடக் கிடைக்கவில்லை. அதனால் பல ஆண்டுகளுக்கு முன் முத்தம்மாள் தன் கணவனோடு பஞ்சம் பிழைப்பதற்காகக் காட்டுப் பாளையம் வந்தாள். "தாயில்லாக் குழந்தையான எனக்கு மாரியாத்தாள் தான் இந்தத் தாயை அனுப்பினாள்" என்று வள்ளியாத்தாள் கருதினாள்.

"அம்மா, மாவிளக்கு அணையாமலே வீட்டுக்கு வர வேணுமா?" என்று அவள் கவலையோடு கேட்டாள்.

அவளுடைய குரலில் தொனித்த அந்தக் கவலை முத்தம்மாளுக்குப் புரிந்துவிட்டது.

"அதனாலே குத்தமில்லை, வள்ளியாத்தா. அது அணைஞ்சு போனதனாலே கெடுதல் வராது. வரப் போகிறதை அது முன்னாலே எனக்குக் காட்டும் அவ்வளவுதான்."

"என்னத்தையம்மா உனக்குக் காட்டும்?"

“ஒண்ணுமில்லே, அடுத்த வருசத்துக்கு மாவிளக் கெடுக்க நீதான் வரவேணும். அவ்வளவுதான்.”

“அம்மா, மாவிளக்கு அணையவே இல்லையம்மா” என்று தடுமாற்றத்தோடு கூறினுள் வள்ளியாத்தாள்.

முத்தம்மாள் ஒன்றும் பேசவில்லை. “எனக்காக இந்தப் பெண் இப்படிப் பொய் சொல்லுதே” என்று நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டாள். “படலம் கண்ணை மறைத்தாலும் வீட்டுக்குள்ளே விளக்கு வந்தால் எனக்குத் தெரிஞ்சுபோகும் என்று இவளுக்குத் தெரியவா போகுது? கண்ணை மூடிக் கொண்டிருந் தாலும் இருட்டு வீட்டுக்குள்ளே விளக்கு வந்தால் கண்ணுக்குள்ளே ஒளி வந்தாப் போல இருக்கிறதை இவள் பார்த்ததில்லை. அதுவும் நல்லதுதான். அவளுக்கு என்னத்துக்கு மனசுக்குக் கவலை? பின்னுலே வரப் போவதை நினைச்சு இவள் வீணுகக் கவலைப்பட்டுக்கப் படாது” என்று இப்படி எண்ணமிட்டுக் கொண்டே, “அது சரி வள்ளியாத்தா, நம்ம மாவிளக்கு எப்படி அணையும்? லக்ஷ்மி இருக்கிற வீட்டிலே இருட்டே வராது” என்று சிரித்த முகத்தோடு சொன்னுள்.

# காதல் விஷயம்

எனக்கு அவளிடம் காதல்; அவளுக்கு என் நண்பன் முத்துசாமியிடம் காதல். அவனுக்கோ யாரிடத்தும் காதல் இல்லை; என்னிடம் மட்டும் அவனுக்குப் பெரிய தோர் நட்பு உண்டு.

இந்தப் பின்னணியில்தான் நிகழ்ச்சிகள் உருவாயின. முத்துசாமி என்னைப் பலவாறு கேலி செய்வான். "என்னடா காதல், காதல் என்று பிரமாதப் படுத்து கிறாய்? காதலாவது கத்திரிக்காயாவது? அதெல்லாம் கவிஞர்கள் கட்டிவைத்த கற்பனை" என்று ஏளனமாகப் பேசுவான். இம்மாதிரி அவன் பேசுவதைக் கேட்கும் போதெல்லாம் எனக்குச் சிரிப்புத்தான் வரும். இனிப்புச் சுவையைத் தங்கள் சொந்த அனுபவத் திலேயே அறியாதவர்களிடம் அதைப்பற்றி எவ்வளவு விளக்கிக் கூறினாலும் அவர்களுக்கு அது விளங்காது. கொஞ்சம் சர்க்கரையை அள்ளி அவர்கள் வாயிலே

போட்டால்தான் அந்தச் சுவையை அவர்கள் உணர முடியும். இதைத்தவிர வேறு உபாயத்தால் அவர்களை உணரச் செய்ய இயலாது. அதுபோலவே காதல் உணர்ச்சியைப் பெருதவனிடம் அதைப்பற்றிப் பேசி என்ன பலன்? நான் படுகிற துன்பம் அவனுக்குக் கேலியாகவே இருக்கும். அவன் எள்ளி நகையாடும்போது இப்படிச் சில வேளைகளிலே நான் அவனிடம் கூறுவேன். அது அவனுக்கு மேலும் உற்சாகத்தை அளித்துவிடும். சரமாரியாக இன்னும் என்னென்னவோ பொழிந்து தள்ளத் தொடங்கி விடுவான்.

"ஏண்டா, நிலவின் ஒளி எப்போதுமே குளிர்ச்சியாகத்தான் இருக்கிறது. காதல் பைத்தியங்களுக்கு அது தழல்போல இருக்கிறதாம். அது எப்படித் தழலாக முடியும்? விஞ்ஞானம் கண்டறிந்த உண்மைக்கு அது முற்றிலும் மாறுபட்டிருக்கிறதே?" என்று சொல்லிக் கடகடவென்று சிரிப்பான்.

"விஞ்ஞானம் எல்லா உண்மைகளையும் கண்டு விட்டதோ? உணர்ச்சியற்ற விஞ்ஞானத்தின் பிடியிலே காதல் அகப்பட்டு விடாது" என்று நான் காதலின் பெருமையைக் குறிப்பாகக் காட்டுவேன்.

ஆனால், இப்படி நகையாடினாலும் எனது நண்பன் எழுதுகிற கதைகளெல்லாம் காதலையே அடிப்படையாகக் கொண்டிருக்கும். முத்துசாமி ஒரு சிறந்த சிறு கதை எழுத்தாளன். உணர்ச்சி பொங்கும் காதல் கவிதைகளும் இடையிடையே எழுதுவான். பேச்சுக் கலையில் அவனை யாரும் எளிதில் வென்றுவிட முடியாது. காதலைப்பற்றி அவனுடைய தனிப்பட்ட அந்தரங்கக்

கருத்து எப்படி இருந்தாலும் அவனுடைய எழுத்திலே காதலின் மூச்சு எல்லோருடைய உள்ளத்தையும் கவருமாறு அப்படி வெளிப்படும்.

"காதல் உணர்ச்சியும் உனக்குக் கிடையாது; மக்களுக்கு அதனல் உண்டாகும் துன்பமும் உனக்குத் தெரியாது. பிறகு எதற்காகக் காதல் கதை எழுதுகிருய்?" என்று கேட்டால், "மக்களுக்கு அதுதான் பிடிக்கிறது; அதற்காகப் பொய்யும் புனைசுருட்டும் சேர்த்து எழுதுகிறேன்" என்று அவன் சற்றும் தயங்காமல் மறுமொழி சொல்லுவான். "எனக்குக் காதல் அனுபவம் தேவையில்லை. எத்தனையோ தமிழ்க் கவிஞர்களும், ஆங்கிலக் கவிஞர்களும், கதை ஆசிரியர்களும் அதைப்பற்றி விண்முட்டிப் போகும்படி புளுகி வைத்திருக்கிருர்கள். அவற்றை வைத்துக்கொண்டு நான் என் ஆயுள் முழுவதும் கதையளக்க முடியும்" என்று மேலும் அவன் விரிவுரையாற்ற ஆரம்பித்து விடுவான்.

அவன் இவ்வாறு பேசுவதைக் கேட்டு எனக்குச் சில வேளைகளிலே பொல்லாத எரிச்சல் உண்டாகும். ஒரே அடியில் அவன் மூளை சிதறும்படி செய்து விடலாமா என்றுகூட ஆத்திரம் பொங்கும். அதே சமயத்தில் காதலின் வலிமையை அறியாத அவனையே அவள் நினைத்துக்கொண்டிருக்கிருளே என்று சுந்தரியின்மேல் எனக்குக் கோபமுண்டாகும். இந்த இரண்டு உணர்ச்சிகளும் ஒரே சமயத்தில் உண்டாவதால் நான் முத்துசாமியை ஒன்றும் செய்யமுடிவதில்லை. மேலும் அவன் எனது உயிர்த்தோழன்; அந்த நட்பு வலிமையும் எப்படியோ மேலெழுந்துவிடும்.

நாங்கள் மூவரும் சென்னையில் ஒரே கல்லூரியிலே ஒரே வகுப்பில் படித்துக்கொண்டிருக்கிறோம். அதனால் அடிக்கடி சந்திப்பதற்கு எங்களுக்குப் போதிய வசதியிருக்கிறது. முத்துசாமி என்னைக் கேலி செய்தாலும் எனக்கு உதவி செய்யவேண்டும் என்ற ஆவலில் சிறிதும் குறைந்தவனல்ல. எப்படியாவது நானும் சுந்தரியும் தனியாகச் சந்திப்பதற்கு அவன் வழி தேடிக் கொண்டேயிருப்பான். அவனுக்குத்தான் கற்பனைத் திறன் மிகுந்திருக்கிறதே. அதை நன்கு பயன்படுத்தி ஏதாவது ஒரு வழி கண்டுபிடித்து அவளையழைக்கச் செல்லுவான். முத்துசாமியிடம் பேசச் சமயம் வாய்த்ததே என்று அவளும் குதூகலமாக வருவாள். பிறகு அவளை என்னிடம் இருக்க வைத்து விட்டு ஏதோ அவசர காரியத்தைத் திடீரென்று நினைத்துக்கொண்டவன் போலப் பாவனை செய்து நழுவிவிடுவான்.

நேற்று முந்தின நாள் நாங்கள் மூவரும் கல்லூரி முடிந்ததும் கடற்கரைக்குச் சென்று 'மெரீனு சிற்றுண்டி விடுதியில்' சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்தோம். சிலுசிலு வென்று குளிர்காற்று வீசிற்று. அந்தக் குளிரிலே சூடாகக் காப்பி குடிப்பதிலுள்ள இன்பத்தைப் பற்றி முத்துசாமி உற்சாகமாக வருணிக்க ஆரம்பித்து விட்டான். "காற்றிலே மிதந்துவரும் காப்பியின் மணத்திற்கு இணை சொல்லவே முடியாது. காதலியின் கூந்தலிலே ஒருவித இயற்கை மணம் இருப்பதாகக் கவிஞர்கள் கூறியிருக்கிறார்கள். காப்பியின் மணத்திற்கு முன்னால் அதெல்லாம் போட்டி போட்டு நிற்க முடியாது" என்றான் முத்துசாமி

"ஏன் முடியாது? நீ சொல்லுவது சரியல்ல. காதலியின் கூந்தலில் உள்ள நறுமணத்தை அறிந்து இன்புறுவதற்கு உன்னைப் போன்ற நக்கீரர்களால் முடியாது" என்று நான் சற்று கொதிப்போடு பேசினேன். சுந்தரியின் முன்னால் காதலின் பெருமையை என்னால் விட்டுக்கொடுக்க முடியுமா?

நக்கீரனோடு அவனை ஒப்பிட்டுக் கூறியதனால் முத்துசாமி ஒரு வகையிலும் மடங்கிவிடவில்லை. "போடா போ, காதலியின் கூந்தலுக்கு வாசனை இருந்தாலும் அந்த வாசனையை நுகராமல் எத்தனை நாள் வேண்டுமானாலும் இருக்கலாம்; ஆனால், காப்பியின் மணமும் சுவையும் ஒரு வேளைக்கு இல்லாவிட்டால் முடியுமா?" என்று கூறிக்கொண்டு அவன் சுந்தரியைப் பார்த்துச் சிரித்தான்.

அவன் பேச்சிலே அவள் சொக்கிப் போய்விட்டாள் என்பதை நான் உணர்ந்தேன். "நீங்கள் கூறுவது மெய் தான்; என்னால் காப்பி யில்லாமல் ஒருவேளைகூட வாழ முடியாது" என்று அவள் அவன் கட்சியை ஆதரித்துப் பேசினாள்.

அதிலிருந்து காதலைப் பற்றியும், காதல் கட்டங்களை நம் நாட்டுச் சினிமாப் படங்கள் காண்பிக்கும் அற்புதத்தைப் பற்றியும் பேச்சு வளர்ந்தது. கடற்கரைக்குச் சென்று அமர்ந்தப் பிறகும் இந்தப் பேச்சு முடியவில்லை.

சற்று நேரத்தில் முத்துசாமி வழக்கம்போல அன்றும் எங்களைத் தனியே விட்டுப் பிரிந்துவிட்டான். நான் சுந்தரியிடம் என் காதலைப் பற்றி உருக்கமாகப்

பேசினேன். அவள் கொஞ்சங்கூட இளகவில்லை. முத்துசாமி பிரிந்து போனபிறகு அவளுக்குப் பேச்சும், சுருண்டு விழும் அலைக்காட்சியும் சப்பென்று தோன்றின. அதையறிந்த நான் முத்துசாமியின் உள்ளத்திலே காதல் என்ற அம்சமே கிடையாது என்பதை அவளுக்கு நன்றாக எடுத்துக்காட்ட முயன்றேன். அவள் யாதொரு பதிலும் கூறவில்லை. ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டு மறுபுறம் திரும்பி உட்கார்ந்துகொண்டாள்.

பிறகு நாங்கள் பிரிந்தோம்.

அன்றிரவு எனக்குச் சிறிதும் தூக்கம் பிடிக்க வில்லை. வாழ்க்கை இருளடைந்துவிட்டது போலத் தோன்றியது. சுந்தரியின் மனத்திலே இடம் பெருமல் உலகத்தில் வாழ்வது பயனில்லை என்று நினைத்தேன்.

இவ்வாறு எண்ணமிட்டுக்கொண்டே எவ்வளவு நேரம் இருந்தேனே தெரியாது. என் முகத்திலே வேதனையின் சாயல் எவ்வளவு ஆழ்ந்து படிந்திருந்ததோ அதுவும் எனக்குத் தெரியாது. ஆனல், திடீரென்று என் அறைக்குள் புகுந்த முத்துசாமி என் முகத்தைப் பார்த்ததும் திகைத்து அப்படியே நின்றுவிட்டான். கன்னத்திலே வழிந்திருந்த கண்ணீரையும் அவன் பார்த் திருக்கிறன்.

விசனத்திலும், சிந்தனையிலும் மூழ்கியிருந்ததால் அறையில் விளக்கெரிவதை நான் கவனிக்கவில்லை. இரவிலே நீண்ட நேரமாகியும் விளக்கெரிவதை முத்து சாமி பார்த்துவிட்டு என் அறைக்கு வந்திருக்கிறன். அவனும் நானும் ஒரே மாணவர் விடுதியில்தான் வசிக் கிறேம்.

என் நிலைமையைக் கண்டு முத்துசாமி மனமுருகி விட்டான். அவனுடைய நட்பின் வலிமையை அந்தக் கணத்திலேதான் நான் நன்குணர்ந்தேன். எனக்கு எவ்வித உதவியும் செய்யத் தயாராக இருப்பதாகத் தழுதழுத்த குரலிலே அவன் பேசினான். எனக்கு உதவி செய்ய வேண்டுமென்று அவன் கொண்டிருந்த ஆவலை அவன் முகம் நன்கு காட்டிற்று.

“ முத்து, நீ என்ன செய்தாலும் அவளுக்குப் பிடிக்கிறது. உனது பேச்சு, எழுத்து எல்லாம் அவளைக் கவர்கின்றன. நீ அவளைக் காதலிப்பதாக இருந்தால் நான் ஒருவாறு சமாதானமடைந்து எனக்குக் கிடைக்காதது என் உயிர் நண்பனாகிய உனக்குக் கிடைத்த தென்று மகிழ்ச்சி யடைவேன். ஆனால், நீயும் அவளைக் காதலிப்பதில்லை; அவளும் என்னைக் காதலிப்பதில்லை ” அதற்குமேல் என்னால் பேச முடியவில்லை. தொண்டை அடைத்துக்கொண்டது.

“ அவள் உன்னிடம் காதல் கொள்வதற்கு என்ன சூழ்ச்சி வேண்டுமானாலும் நான் செய்கிறேன் ” என்று முத்துசாமி வாக்குறுதி கூறினான்.

எனக்குச் சட்டென்று ஒரு யுக்தி தோன்றியது. “ முத்து, காதலினால் நான் படுந்துயரத்தையெல்லாம் விளக்கி நானே எழுதியதுபோல நீ ஒரு கடிதம் எழுதிக் கொடு. உன்னுடைய எழுத்திலே அவளுக்கு மிகுந்த கவர்ச்சியிருக்கிறது. அந்தக் கடிதத்தைப் பார்த்தாவது அவள் என்மேல் மனமிளகட்டும். உன்னுடைய கற்பனைத் திறனையெல்லாம் பயன்படுத்திக் கடிதம் எழுதிக் கொடு. என்னால் அவ்வளவு அழகாக எழுத

முடிவதில்லை" என்று நான் கெஞ்சும் மொழியில் கேட்டேன்.

முத்துசாமி உடனே அதற்கிசைந்தான். இசைந்த தோடு அப்பொழுதே எழுதவும் தொடங்கிவிட்டான். அவனுடைய கற்பனையின் திறமையோ, அல்லது எனது அவல நிலைமை அவனுக்கு ஊட்டிய உணர்ச்சியோ அல்லது இரண்டும் சேர்ந்தோ—எப்படியோ ஒரு மிக உருக்கமான கடிதம் உருவெடுத்தது. காதல் என்னும் பெரு நெருப்பிலே தானே விழுந்து தத்தளித்துக்கொண் டிருந்ததால் எவ்வாறு அவனுக்கு உணர்ச்சி பொங் குமோ அப்படி அவன் எழுதியிருந்தான். அதைப் படிக்கும்போது என்னால் கண்ணீரை அடக்கமுடிய வில்லை; இதயம் வெடித்துவிடும் போலிருந்தது. அக் கடிதத்தின் மூலம் எனக்கு வெற்றி நிச்சயம் கிடைக்கு மெனத் தெரிந்தது. உள்ளத்திலே ஒரு புதிய உற்சாகம் கொழுந்துவிட்டு மேலெழுந்தது. கடிதத்திற்குப் பிரதி யொன்றெடுத்துக் கையெழுத்திட்டேன். அதை உறைக் குள் போடும்போது என் கை நடுங்கியது.

கடிதத்தைத் தபாலிலே சேர்த்துவிட்டு இன்று வரை ஆவலோடு பொறுத்திருந்தேன். பதில் கடிதம் வரும் என்றும் அவளே நேரில் பேசுவாளென்றும் எதிர்பார்த்தேன். இன்று கல்லூரியில் சந்தித்தபோது அவள் ஒன்றும் பேசவில்லை. அதனால் மாலை நேரம் ஆக ஆக என்னால் பொறுத்திருக்க முடியவில்லை. கல்லூரி முடிந்ததும் சுந்தரியிடம் நானே சென்று, "எனது கடிதத்தைப் பார்த்தாயா ?" என்று ஆவ லோடு விசாரித்தேன். முதலில் அவள் பதில் பேச வில்லை. ஆனால், மறுமுறையும் நான் வற்புறுத்திக்

கேட்கவே, பெருமூச்செறிந்து கொண்டு அவள் பதில் கூறினுள் : "கடிதம் எனக்குக் கிடைத்தது. படித்துப் பார்த்தேன்; ஆனுல், இந்தக் காதல் உணர்ச்சியை முத்துசாமி சித்தரித்திருந்தால் எவ்வளவு உருக்கமாக இருந்திருக்கும்! நீ எழுதியதில் வெறும் வார்த்தைகள் தானிருக்கின்றன. அவற்றிற்கு உயிரே இல்லை" என்று கூறிவிட்டு அவள் நகர்ந்துவிட்டாள்.

அட கடவுளே, இதற்கு நான் என்னசெய்வேன் ?

# எஜமானி

குப்பையிலே கிடக்கும் அந்தப் பொம்மைக்கு சரோஜா கொடுத்த பெயர் முத்தி. சென்ற மாதம் வரை வீட்டில் வேலை செய்துவந்த பெண்ணொருத்தியின் பெயர் முத்தம்மாள் என்பது. முத்தி என்று எல்லோரும் அவளைக் கூப்பிடுவார்கள். அவள் பல நாள் அங்கே வேலை செய்யவில்லை. வழக்கமாக அந்த வீட்டிற்கு வேலைக்கு வருகிறவர்களைப் போலவே அவளும் இரண்டொரு மாதங்களில் வேறிடம் தேடிக்கொண்டாள். அதற்கு மேலே அந்த வீட்டு அம்மாளுடைய கெடுபிடியை ஒருவராலும் தாங்க முடியாது.

முத்தம்மாள் பொறுமைக்காரி. அவளால்கூட அதைத் தாங்க முடியவில்லை. வீட்டு எஜமானியைப் போலவே எஜமானியின் மகள் சரோஜாவும் சூழ்நிலைக்கு ஏற்பப் பழக்கம் பெற்று வந்தாள். அவளும் முத்தியை அதிகாரம் செய்வதில் குறையவில்லை.

முத்தி விலகியவுடன் சரோஜாவின் பொம்மை அவளுக்கு முத்தியாகி விட்டது. வேலைக்காரி முத்திக்குத் திட்டும் வசவும் மட்டும் கிடைக்கும். பொம்மை முத்திக்கு அடியும் கிடைத்தது. பொம்மை முத்தி சரோஜாவின் வேலைக்காரி. அம்மாளுடைய வசவு வார்த்தைகளை சரோஜாவிடம் அப்படியே கேட்கலாம். முத்தி அவற்றைப் பொறுமையோடு கேட்டு வந்தது. ஆனால், அடியை அதனால் தாங்க முடியவில்லை. முதலில் அதன் மேலேயிருந்த நார்ப்பட்டு ஆடை கிழிந்தது. பிறகு காலொன்று நொண்டியாயிற்று. தலையிலே ஒரு வெடிப்புத் தோன்றியது. கண் ஒன்று நொள்ளை யாகும்படி சரோஜாவுக்கு ஒரு நாள் கோபம் வந்து விட்டது.

வேலைக்காரி முத்தி தானே வேறிடம் தேடிக் கொண்டாள். பொம்மை முத்தி அப்படிச் செய்ய வில்லை. ஆனால், கண் நொள்ளையான பிறகு, சரோஜாவே அதைத் தூக்கி எறிந்து விட்டாள். ஆடை கிழிந்து, உறுப்புக்கள் சீரழிந்து போன பொம்மை முத்தி குப்பைக்குப் போயிற்று.

புதிய வேலைக்காரி குப்பையில் கிடந்த முத்தியைத் தேடி எடுத்தாள். அவள் வீட்டிலே தனியாகத் தவிக்கும் ஐந்து வயசுக் குழந்தைக்கு அதைக் கொடுக்க லாம் அல்லவா? வேலைக்கு வந்த புதிதில் சில நாட்கள் அவள் தன் குழந்தையைக் கூடவே அழைத்து வந்தாள். ஆனால், அந்த எஜமானி வீட்டில் அது சரிப்படாது என்று விரைவில் தெரிந்து போய்விட்டது. அதனால் வீட்டிலேயே குழந்தையை விட்டு வந்தாள். அதைப் பார்த்துக் கொள்ள அங்கே யாரும் இல்லை. தனியாக

இருக்க அது விரும்பாமல் அழுது தொந்தரவு செய்தது. அதற்கு விளையாட பொம்மை கிடைத்ததென்று அந்தத் தாயுள்ளம் மகிழ்ந்தது.

முத்தி இப்பொழுது எஜமானி ஆகிவிட்டது. வேலைக்காரியின் குழந்தை எச்சுமிக்குப் பொம்மையைக் கண்டு ஒரே உற்சாகம். ஒரு பொக்கிஷம் அவளுக்குக் கிடைத்துவிட்டது போல ஆனந்தம். எஜமானி வீட்டுப் பெண் சரோஜாவின் பொம்மையல்லவா அது? அது எச்சுமிக்கு எஜமானியாக இல்லாமல் வேறு எப்படி இருக்க முடியும்?

அதைத் தன் விளையாட்டுத் தோழியாகவோ, தன் வேலைக்காரியாகவோ பாவிக்க அவளால் முடியவே இல்லை. அப்படிப்பட்ட எண்ணமே அவள் உள்ளத்தில் தோன்றவில்லை. உடைசலும் கிழிசலுமாக இருந்த முத்தியிடம் அவளுக்குப் பணிவும் மரியாதையுமே ஏற்பட்டன.

ஓட்டை விழுந்துபோன பழைய மூங்கிற் கூடை ஒன்று குடிசையில் ஒரு மூலையிலே கிடந்தது. அதை எடுத்துக் குப்புறக் கவிழ்த்தாள் எச்சுமி. கந்தல் ஒன்றை மேலே விரித்தாள். அதன் மேலே முத்தியை பயபக்தி யோடு உட்கார வைத்தாள். அதன் வாயிலிருந்து வரும் உத்தரவுக்காக எச்சுமி எதிர்பார்த்து நின்றாள்.

முத்தி தோரணையோடு கூடை மேலே அமர்ந் திருந்தது. ஒடிந்து கிடந்த அதன் கை இப்பொழுது மேலும் கீழும் கம்பீரமாக அசைந்து அதிகாரம் காட்டியது. "ஏண்டி எச்சுமி, இன்னும் வீடு பெருக்கி முடியவில்லையா? சோம்பேறிக் கழுதை!" என்று முத்தி

கர்ஜித்தது." எச்சுமிக்கு இந்த வார்த்தைகள் நன்ருகக் கேட்டன. அவளேதான் அவற்றைச் சொன்ஞள். ஆனுல், முத்தி கூறுவதாகத்தான் அவள் உள்ளத்திலே வார்த்தைகள் பதிந்தன.

" அம்மா, இதோ ஆச்சு. கோவிக்காதேங்கோ" என்று எச்சுமி பயந்து பயந்து கூறிக்கொண்டே அவசர அவசரமாகக் குடிசையைப் பெருக்கிஞள். தன் தாயார் கூறும் பதிலே அவள் நன்ருகக் கற்றுக்கொண்டிருந்தாள். அகத்திக் கீரையைப் பறித்த பிறகு அதன் இலேக் காம்புகளேச் சேர்த்து ஒரு விளக்குமாருகக் கட்டி எச்சுமியின்தாய் கொடுத்திருந்தாள். அதைத்தான் எச்சுமி இப்பொழுது உபயோகித்து வீடு பெருக்குகிருள்.

தனியே குடிசையில் இருக்க மாட்டேன் என்று இப்பொழுது எச்சுமி முன் போலத் தொந்தரவு செய்வ தில்லே. அவளுக்குத்தான் எஜமானியம்மாள் கிடைத்து விட்டாளே! எஜமானியம்மாளின் பணிவிடையிலே அவள் பொழுதெல்லாம் இன்பமாக வேறு நினேப்பின்றி கழிந்தது.

# மூன்று மணி

மூன்றாம் வகுப்பு மாணவர்கள் கணக்குப் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஐந்தாறு கணக்குகளைக் கரும்பலகையில் எழுதி வைத்துவிட்டு ராமசாமி வாத்தியார் யோசனையில் ஆழ்ந்திருக்கிறார்.

அது ஒரு ஆரம்ப பாடசாலை. மொத்தம் ஐந்து வகுப்புக்கள் உண்டு. நான்காவது, ஐந்தாவது வகுப்புக்கள் தலைமையாசிரியரின் பொறுப்பில் பக்கத்து அறையில் நடந்தன. முதல் மூன்று வகுப்புக்கள் ராமசாமி வாத்தியாரின் பொறுப்பு. ஒரே அறையில் அந்த மூன்று வகுப்புக்களையும் வைத்து ஏக காலத்தில் அவர் சமாளிக்க வேண்டும். அதற்குத் தகுந்தவாறு அவர் படிப்புக் கால அட்டவணை வகுத்திருந்தார்.

மாலையிலே மூன்றாம் வகுப்புக்குக் கணக்குப் பாடம் வரும்போது முதல் வகுப்பு வெளியே சென்று மரத்தடியில் நின்றுகொண்டு, ' ஒன்று, இரண்டு, மூன்று

என்று ஐம்பது வரை சொல்லிக் கொண்டிருக்கும். இரண்டாம் வகுப்புக்கு அப்பொழுது தோட்ட வேலை.

இப்படியாக ராமசாமி வாத்தியார் பாடங்களை மாற்றி மாற்றி அமைத்து மூன்று வகுப்புக்களையும் சமாளித்து வந்தார்.

இந்த வித்தையிலே ஈடுபட்டிருக்கும் பெரும் பான்மையான ஆசிரியர்களைப் போலவே ராமசாமி வாத்தியாரும் ஆசிரியத் தொழிலையே முழுமனதோடு வெறுத்துக்கொண்டிருந்தார். அதன் விளைவாக அவர் மனத்தில் அந்தச் சமயத்தில் புதுவிதமான யோசனை ஓடிக்கொண்டிருந்தது.

நாளைக்குப் போய் அந்த ஆட்டத்தில் இந்த மாத சம்பளம் முழுவதையும் வைத்துப் பார்த்து விடலாம். வந்தால் ஒரு ஐநூறு வரட்டும் ; இந்த வேலையை உதறி எறிந்துவிட்டு ஒரு வெற்றிலை பாக்குக் கடை வைத்துக் கொள்ளலாம். சில்லறைக் கடை வைக்கக்கூட வகையில்லாமலல்லவா இந்த வேலையைக் கட்டிக் கொண்டு மாரடிக்கவேண்டியிருக்கிறது? முப்பது ரூபாய் சம்பளம்; பஞ்சப்படி இருபது ரூபாய். சாமான்கள் விலை நான்கு மடங்கு உயர்ந்து விட்டது ; சம்பளம் ஒன்றரை மடங்கு தானுகியிருக்கிறது. எப்படித்தான் காலந் தள்ளுகிறது ? இந்த லக்ஷணத்தில் ஜில்லா போர்டு பிரசிடெண்டுக்கு மனசு போனபடியெல்லாம் ஜில்லாவில் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்கு எந்த சமயத்தில் வேண்டுமானுலும் மாற்றிவிடுகிறுர். அதற்குத் தப்ப வேண்டுமானுல் அவருக்குத் தொங்கு சலாம் போட்டுக்கொண்டிருக்க வேண்டும். சே, இந்த வாத்தியார் வேலை

எவ்வளவு கேவலமாக இருக்கிறது! நாளைக்குக் கட்டாயம் அந்தச் சூதாட்டம் ஆடிப் பார்த்துவிடலாம். போனால் ஒரு மாதச் சம்பளந்தானே போகும்? என்னுடைய திட்டப்படி ஒரு ஐநூறு வந்துவிட்டால் பிறகு கவலையே ஒழிந்துவிடும்.

இப்படி அவர் நீள எண்ணமிட்டுக் கொண்டே இருந்தார். மணி மூன்றாகிவிட்டது. அவர் தூங்கி விழலானார். பையன்கள் யாரும் இதை அதிகமாகக் கவனிக்கவில்லை. தினசரி கண்ட விஷயமாதலால் அவர்களுக்கு அதில் புதுமை ஒன்றும் கிடையாது.

மணி மூன்றானால் ராமசாமி வாத்தியார் தூங்கி விடுவார் என்பது அந்தப் பள்ளிக்கூடத்தில் மாணவர்கள் எல்லோருக்கும் தெரியும். கடிகாரம்கூடச் சில நாட்களில் பிசகிப் போவதுண்டு! ஆனால், அவர் தூங்குவதில் மட்டும் குறிப்பிட்ட காலம் தவறினதே இல்லை.

ராமசாமி வாத்தியார் அதிக நேரம் தூங்கிவிட மாட்டார். ஒரு பதினைந்து நிமிஷந்தான். அதன் பிறகு நிச்சயம் எழுந்துவிடுவார். எழுந்ததும் அதுவரை ஏதோ யோசனையிலிருந்தது போலப் பாவனை செய்து கொண்டு "என்னடா கணக்குகள் எல்லாம் போட்டாய் விட்டதா?" என்று சத்தம் போடுவார். அவர் எழுந்திருந்ததைக் கவனியாமல் குறுக்கும் நெடுக்குமாகத் திரிந்து கொண்டிருக்கும் பிள்ளைகளுக்குச் சுடச்சுட இரண்டு கிடைப்பதும் சகஜம்.

இது நாள்தோறும் நடக்கும் நிகழ்ச்சி. அடுத்த நாளிலேயே இந்த வாத்தியார் வேலையையே வீசியெறியப் போகிறாரே, அந்த ஒரு நாளாவது குழந்தைகளை

அடிக்காமல் விடப்படாதா—இல்லை. ரொம்ப நாள் பழக்கம்; லேசில் விட்டு விடுகிறதா? அன்றும் சிலருக்குப் பிரம்புப் பூசை கிடைத்தது.

அன்று வெள்ளிக்கிழமை. அடுத்த சனிக்கிழமை யன்று காலை நேரத்தில் மட்டுந்தான் பள்ளிக்கூடமுண்டு. ஆகவே, மத்தியானம் சாப்பிட்டதும் 'பம்பாய் ஷோ' என்னும்படியான அந்தக் கேளிக்கை விளையாட்டுக் கண் காட்சியைக் காணச் செல்லலாம். அங்கே பந்தயங்களும் சூதாட்டங்களுந்தான் முக்கியமான அம்சங்கள். வாத்தி யாருக்கு ஏற்ற அம்சங்களல்லதான். ஆனால், அம்மா திரி நினைத்தால் முடியுமா? சட்டென்று பணம் சம்பாதிக்க வேறு வழி என்ன இருக்கிறது? "எனக்குமட்டும் ஒரு ஐநூறு வந்துவிட்டால் இந்தத் தரித்திரம் பிடித்த வேலையைத் தூக்கி எறிந்து விடலாம்"—என்றிப்படி யெல்லாம் ராமசாமி வாத்தியார் எண்ணித் திட்டம் போட்டு விட்டார். ஓரங்களிலெல்லாம் நூல் பிரிந்து தொங்கும்படியான அவர் சட்டைப் பையில் அன்று பெற்றுக்கொண்ட சம்பளம் ரூபாய் முப்பதும் பஞ்சப் படி ரூபாய் இருபதும் ஓசையிட்டுக் கொண்டிருந்தன.

சூதாட்டக் காரியத்தில் பிரவேசிப்பதற்கு ராமசாமி வாத்தியார் எத்தனையோ நாட்கள் யோசனை செய் திருக்கிறார். யோசனை யென்றால் ஒரு வகையான யோசனையல்ல. தலை கீழாக, கீழ் மேலாக எல்லாம் பார்த்திருக்கிறார். பல வருஷங்களாக ஜில்லா போர்டு தலைவருக்கும், அங்கத்தினர்களுக்கும், ஜூனியர் டெபுடி இன்ஸ்பெக்டருக்கும், அவர் சேவகனுக்கும், இன்னும் வேலை பார்த்த ஊர்களிலுள்ள கனதனவான்களுக்கும்

பயந்து பயந்து, அந்தபயமே ரத்தத்தில் ஊறி இயற்கைச் சுபாவமாக மாறிவிட்டமையால் துணிச்சலாக அவரால் எந்தக் காரியத்தையும் சட்டென்று செய்ய முடியாது. பல நாள் யோசனை செய்து, சிதறுண்டு கிடக்கும் தைரியத்தையெல்லாம் திரட்டி, அத்துடன் வாத்தியார் வேலை மேலுள்ள வெறுப்பையும் அதனால் படும் குடும்பக் கஷ்டங்களையும் கூட்டிக் கடைசியில் சூதாட்டம் ஆடிப் பார்த்துவிடுவது என்ற முடிவுக்கு வந்திருக்கிறார். வந்த பிறகுங்கூட எத்தனை தயக்கம், எத்தனை மனக் குழப்பம்!

ஆனால், மறுநாள் மத்தியான்னம் இரண்டு மணிக்கு ஒரே தைரியத்துடன் கண்காட்சிச் சூதாட்டத்திற்குப் புறப்பட்டு விட்டார். அந்த நாளை விட்டு விட்டால் அடுத்த சனிக்கிழமை வருவதற்குள் பணமெல்லாம் தீர்ந்து போகுமே!

வந்தவர் நேராகச் சூதாடுமிடத்திற்கே காலெடுத்து வைத்தார். ஒரு ஐநூறு ரூபாய் அடித்துவிட்டால் அப்புறம் சாவகாசமாகக் கண்காட்சியைப் பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுது அதற்கு என்ன அவசரம்?

சூதாட்டத்திலே எது தமக்குப் பிடிக்கிறது; எதில் நல்ல பணம் கிடைக்கும் என்று ஆராய்ந்து பார்த்தார். ஓரிடத்திலே மேஜையின் மேல் ஒரு மெழுகுரட்டு விரித்திருந்தது. அதில் யானை, குதிரை, ஒட்டகம் என்றிப்படி ஆறு மிருகங்களின் உருவங்கள் தனித்தனியாக ஆறு கட்டங்களில் வரையப்பட்டிருந்தன. பக்கத்திலே ஒரு பெட்டியில் பல காகித உறைகள் அடுக்காக இருந்தன. ஒருவன் அந்த அடுக்கிலிருந்து ஒரு உறையை எடுத்து

அதிலிருந்த மூன்று மிருகங்களின் படங்களை வெளிப் படுத்தி, மெழுகு ரட்டில் உள்ள அதே மிருகங்களின் படங்களோடு இணைத்து வைக்கிறான். எந்த மிருகத்தின் மேல் பணம் வைத்தாலும் அதன் பிரதி ஒன்று உறையி லிருந்து கிடைத்தால் அவ்வளவுக்கவ்வளவு பணம் கிடைக்கும்; அதே மிருகத்தின் படத்தில் இரண்டு பிரதிகள் வந்துவிட்டால் இரட்டிப்புத் தொகை கிடைக்கும். ஒன்றும் வரவில்லையென்றால் வைத்த பணத்தை இழக்க வேண்டும்.

இந்த ஆட்டம் வெகு சுலபம். இதற்குத் திறமை யொன்றும் தேவையில்லை. பணத்தை ஏதாவது ஒரு மிருகப் படத்தின் மேல் வைக்க வேண்டியதுதான். அதன் பிரதி உறையிலிருந்து கிளம்பினால் லாபம்; இல்லாவிட்டால் இல்லை. அவ்வளவுதானே? ராமசாமி வாத்தியாருக்கு இது ரொம்பவும் பிடித்தமாக இருந்தது. அங்கேயே ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து மேஜையின் மேல் கையை ஊன்றிக் கன்னத்தில் உள்ளங்கையைக் கொடுத்துக் கொஞ்ச நேரம் ஆட்டத்தைக் கவனிக்க லானார். முதலில் சற்று நேரமாவது பிறர் ஆடுவதையும், ஆட்டத்தின் போக்கையும் கவனிக்க வேண்டாமா? திடுதிப்பென்று முன்னும் பின்னும் தெரியாத காரி யத்தில் இறங்கிவிட முடியுமா? அவ்வளவு அவசரக் காரரல்ல ராமசாமி வாத்தியார்.

பிறகு ஒரு நாலணாவை எடுத்து ஒரு படத்தின்மேல் வைத்தார். அப்புறம் ஒரு நாலணா. இப்படி ஒரு பதினைந்து நிமிஷங்கள் கழிந்தன. வருவதும் போவது மாக அதுவரை விசேஷ லாபமோ நஷ்டமோ எதுவும் ஏற்படவில்லை. ராமசாமி வாத்தியார் பார்த்தார். அந்த

மாதிரி ஆடிக் கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை யென்று தெரிந்தது. நாள் முழுதும் ஆடினாலும் நாலு ரூபாய் வரும்; அல்லது நாலு ரூபாய் போகும். அதனால் தமது எண்ணம் கை கூடாது என்பதை அவர் உணர்ந் தார். ஆதலால் ஐம்பது ரூபாயையும் எடுத்து ஒரே யடியாக வைக்கத் தீர்மானித்தார். இதற்குள் ஆட்டத் திலும் பழக்கமேற்பட்டு விட்டதால் அவருக்குத் துணிச்சல் பிறந்துவிட்டது. பணத்தை யானையின் மேல் வைத்துவிட்டுக் கன்னத்தில் கைகொடுத்து உட்கார்ந்து விட்டார் ராமசாமி.

"வை ராஜா வை; வைக்க வைக்க ஜயம். நாய், குதிரை காலி—வை ராஜா வை" என்று கூவிக் கூவி ஆட்டம் நடத்துபவன் எல்லோரையும் கவர்ச்சி செய்து கொண்டிருந்தான். ஆறு படங்களிலும் பணம் கட்டப் பட்டிருந்தால்தானே அவனுக்கு லாபம் நிச்சயம்? தவிர ஒரு படத்தில் ஐம்பது ரூபாய் விழுந்து விடவே அவனுக்கு மற்ற படங்களிலும் பணம் நிறைய விழவேண்டுமென்ற எண்ணம் அதிகரித்தது.

அதனால் பெட்டியில் உள்ள உறையை எடுப்ப தற்குக் கொஞ்சம் தாமதம் ஏற்படவே ராமசாமி வாத்தி யார் யோசனையில் ஆழ்ந்துவிட்டார். "இன்று மட்டும் ஒரு ஐநூறு வந்து விட்டால் என் கவலையே தீர்ந்து போகும். சூதாடுவது நல்லதல்லதான். நானே எத்த னையோ தடவை மாணவர்களுக்கு உபதேசம் செய்திருக் கிறேன். ஆனால், வேறு வகையில் நான் எப்படிப் பணம் சம்பாதிக்கப் போகிறேன்? இந்த வாத்தியார் வேலையிலிருந்து கொண்டு மிச்சப்படுத்துவதென்பதோ முடியாத காரியம். ஊரார் தயவில் இலவசமாகக் காய்

கறி, மோர் முதலியவை கிடைக்காவிட்டால் சோற்றுக்கே தாளம் போட வேண்டியதுதான். இன்றைக்கு ஒருநாள் மட்டும் சூதாடிவிட்டு மறுபடியும் இந்தப் பக்கமே வரப்படாது. ஒரு ஐநூறு வந்து விட்டால் ராஜினமாக் கடிதத்தை அந்த ஜில்லா போர்டு காரிய தரிசி மூஞ்சியில் எறிந்துவிட்டுப் பேசாமல் ஒரு சின்னக் கடை வைத்துக்கொள்ளலாம். எருமை மாடு இரண்டு வாங்கி வளர்த்தால்கூடப் பால் விற்றுத் தினம் மூன்று நான்கு ரூபாய் சுலபமாகச் சம்பாதித்துவிடலாம். யாருடைய தயவு தாட்சண்ணியமும் வேண்டியதில்லை.''

இப்படியெல்லாம் அவர் ஒரே விஷயத்தைப் பற்றித் திருப்பித் திருப்பி எண்ணிக் கொண்டிருந்தார். மணியும் மூன்றாகிவிட்டது. ஆட்டமும் தொடர்ந்தது. அவருக்கு அதிர்ஷ்டம் அடித்துவிட்டது. யானையிலே இரட்டைப் படம் வந்தது. ராமசாமிக்கு அவர் கட்டிய ஐம்பதோடு மேலும் நூறு ரூபாய் கிடைத்தது. ஆனால், யானையின் மேல் கிடக்கும் நூற்றைம்பது ரூபாயையும் அவர் தொடவே இல்லை. அடுத்த ஆட்டத்திற்கும் அது அப்படியே குவியலாக இருந்தது. முதலில் ஐம்பது ரூபாய் வைத்த ஆள் நூற்றைம்பது வைக்கத் தயங்குவானு? அதனால் யாரும் ஆச்சரியப்படவில்லை.

அடுத்த ஆட்டத்திலும் அவருக்கு யோகந்தான். ஒற்றை யானை விழுந்தது. பணம் வந்து குவிந்து கொண்டிருந்தது. இந்தத் தடவை எல்லாவற்றையும் வாரிக் கொள்வார் என்று மற்ற சூதாடிகள் எதிர்பார்த்தார்கள். ஆனுல், அவர் பணத்தைத் தொடவே இல்லை. அவருடைய நெஞ்சத் துணிவைக் கண்டு எல்லோரும் வியந்தார்கள்.

இப்பொழுது ஆட்டம் பலத்துவிட்டது. யானை மேல் முந்நூறு ரூபாய் கிடக்கிறது. எல்லாம் ராமசாமி வாத்தியாருடையது. ஆனால், அவர் அதைத் தொட வில்லை.

"வை, ராஜா வை; வைக்க வைக்க ஜயம். வை, ராஜா வை"......இன்னும் ஒரு உறை வெளியில் வந்தது. அதிலும் ராமசாமி வாத்தியாருக்கு ஜயந்தான். மேலும் ஒரு யானை. ஆனால், அப்பொழுதும் அவர் பணத்தைத் தொடவில்லை. சில பேர், "என்னடா இந்த மனுஷனுக்கு இத்தனை ஆசை ஆகாது" என்று கூடப் பேசிக் கொண்டார்கள். யானையின்மேல் அறுநூறு ரூபாய் நோட்டுக்களாகக் கிடந்தது.

மற்றோர் ஆட்டம். ஆனால், இந்த முறை யானை வரவில்லை. அத்தனை ரூபாயையும் ஆவலோடு ஆட்டக் காரன் வாரிக் கொண்டான். அப்பொழுதுதான் ராம சாமி வாத்தியார் ஒரு பெரு மூச்சுவிட்டார். ஆனால், அத்தனை நேரமும் தாம் வழக்கம்போலத் தூங்கி விட்டதை யாருக்கும் காண்பித்துக் கொள்ளவில்லை. அப்படியே கடைக்கண்ணால் சுற்றுமுற்றும் பார்த்தார். யானை காலியாக இருந்தது. "அடடா, தினமும் போலப் பதினைந்து நிமிஷம் தூங்கிவிட்டேனே. பணம் முதல் ஆட்டத்திலேயே போய்விட்டது போலிருக்கிறது. போனதைக்கூட நான் பார்க்கவில்லை" என்று எண்ணிக் கொண்டே எழுந்து புறப்பட்டார். அவருடைய ஆகாயக் கோட்டை யெல்லாம் தூளாகிவிட்டது.

யாராவது தம்மை அங்கே பார்த்துவிட்டால் கேவலமாகுமே என்று இப்பொழுது அவருக்கு ஒரே

பீதி. வாத்தியார் சூதாடுகிறார் என்றால் மானம் போய் விடுமே. கூட்டத்தின் ஒரு பக்கத்திலே மாணவர் சிலரும், ஜில்லாபோர்டு அங்கத்தினர்கள் இருவரும் இருப்பது அவர் கண்ணிற்பட்டது. அவர்களுக்குத் தெரியாமல் வெளியில்போக வேண்டுமென்று அவர் பட்ட அவஸ்தை சொல்லி முடியாது.

தூக்கநிலையிலே அன்று அவருக்கு வந்த அதிருஷ்டத்தை அவர் தெரிந்துகொள்ளவே இல்லை. பழைய படி இன்றைக்கும் அவர் மூன்று மணிக்கு வகுப்பில் தூங்குவதில் தவறுவதில்லை.

# ரயில் திருட்டு

முதல் வகுப்பு ரயில் பெட்டிகளின் வெளியே செருகியுள்ள ரிசர்வேஷன் கார்டுகளை ஒவ்வொன்ருகப் படித்துக்கொண்டே அவன் நடந்தான். சுந்தரவதனன் என்று ஒரு கார்டில் பெயரைக் கண்டதும் அந்தப் பெட்டியில் தனது படுக்கையை விரிக்கும்படி போர்ட்டருக்குக் கம்பீரமாக உத்தரவு கொடுத்தான். பெட்டிக் குள்ளே நுழைந்து அங்கிருந்த நிலைக் கண்ணுடியில் ஒரு முறை தனது முகத்தைப் பார்த்துக் கொண்டான்.

" சுந்தரவதனன், சுந்தரவதனன்—என்ன அழகான பெயர்! ஆனால், முகத்தைப் பார்த்தாலோ?"—இந்த நினைப்பு அவனுக்கே சிரிப்பை யுண்டாக்கியது.

எட்டுக்கால் பூச்சி மீசையும், உதட்டை வெளியே தள்ளித் துறுத்திக் கொண்டு தோன்றும் பல் வரிசையும் அவனுடைய முகத்திற்கு ஒரு விநோதமான தோற்ற

மளித்தன. பச்சை நிறத்திலே நல்ல தடிப்பான சட்டம் போட்ட மூக்குக் கண்ணுடி ஒன்றும் அவன் அணிந்தி ருந்தான். அது அந்தத் தோற்றத்தை மேலும் மிகைப் படுத்திக் காட்டிற்று. ஆனால், பெயர் மட்டும் சுந்தர வதனன்! "அதனுலென்ன? நான்தான அப்படிப் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறேன்? நம் நாட்டிலே எத்தனையோ பேருக்கு இப்படி நேர்மாருகப் பெயர் அமைந்திருக்கிறது. நேற்றுக். கடற் கரையிலே பார்த்தேனே அந்தப் பெண்ணுக்கு மீனுட்சி என்று பெயராம். மீனைப் போலவா கண்ணிருந்தது; புளியங் கொட்டை மாதிரிதானே காட்சியளித்தது?" என்று இவ்வாறு அவன் சிந்தனை ஓடிற்று. புளியங் கொட்டையைக் கண்ணுக்கு உபமானமாக நினைத்ததால் அவனுக்குத் தன் கற்பனைத் திறமையைப்பற்றி ஒரு தனிப்பெருமையும் நம்பிக்கையும் எழுந்தன. படுக்கை யைத் தூக்கி வந்ததற்காகப் போர்ட்டர் கூலி கேட்ட போதுதான் தற்பெருமை செய்து கொண்டிருந்த அவனுடைய சிந்தனை தடைபட்டது.

போர்ட்டருக்கு நான்கணுவைக் கொடுத்து அனுப்பிய பின் சுந்தரவதனன் ரயிலைவிட்டுக் கீழிறங்கி பிளாட்பாரத்தில் அங்குமிங்கும் நடமாடத் தொடங் கிஞன். அங்கு கண்ட காட்சிகள் அவன் சிந்தனைக்குப் புதிய விருந்தாக இருந்தன. "காரியாலயத்திற்குள்ளே அடைபட்டுக் கிடப்பதால் எத்தனை அனுபவங்கள் எனக்குக் கிடைக்காமல் போகின்றன! இன்ருவது வெளியே உல்லாசமாகப் போய்வரப் புறப்பட்டேனே ரொம்ப நல்ல காரியம்" என்று தன்னைத்தானே மெச்சிக் கொண்டான்.

அவன் கண்கள் துருதுருவென்று வருவார் போவாரை யெல்லாம் கவனித்துக்கொண்டிருந்தன.

ரயிலுக்கு வருகிற மக்களை இரண்டு ஜாதியாகப் பிரிக்கலாமென்று திடீரென்று அவனுக்குத்தோன்றியது. ஔவையாரே இப்படி ஜாதி பிரிக்கும் காரியத்தில் இறங்கியிருப்பதால் தானும் அதைச் செய்யவேணும் என்று அவன் கருதினான். அவசரம் அவசரமாக விழுந்தடித்து ஓடிவந்து ஏதாவது ஒரு பெட்டிக்குள் நுழைந்து அங்கு ஓரே கூட்டமாக இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி அங்கேயே அடைபட்டுக் கிடக்கிற மக்கள் ஒரு ஜாதி; ஒவ்வொரு பெட்டியாகப் பரிசோதனை செய்துவிட்டு சாவகாசமாக ஒரு பெட்டியில் வசதி பார்த்து ஏறுகிறவர்கள் இன்னொரு ஜாதி. இங்கேயும், “ஜாதி யிரண்டொழிய வேறில்லை” என்று சுந்தரவதனன் மனதிற்குள்ளேயே தீர்ப்புக் கூறிக் கொண்டான்.

ரயில் புறப்படுவதற்கு அறிகுறியாக முதல் மணி அடித்தது. சுந்தரவதனன் தான் ஏறவேண்டிய பெட்டியை நோக்கி நடந்தான். அந்தப் பெட்டிக்குள்ளே இப்பொழுது தாடியும், துருக்கிக் குல்லாவுமாக ஒரு தடி மனிதர் அமர்ந்திருப்பதைக் கண்டான். வண்டியில் ஏறும் பாவனையிலேயே அவன் ரிசர்வேஷன் கார்டை மற்றொரு முறை பார்த்தான். சையத் காதர் என்ற பெயர் அவன் பெயருக்கும் கீழே தென்பட்டது. “கூடப் பிரயாணம் செய்பவரின் பெயரை எவ்வளவு நாகரிகமாகத் தெரிந்து கொண்டேன்!” என்று அவனே பெருமைபட்டுக்கொண்டு விரிக்கப்பட்டிருந்த தனது படுக்கையிலே அமர்ந்தான். எதிர்ப்பக்கத்து மெத்தை

யிலே மற்றவர் அமர்ந்து தாடியை நீவிக் கொண்டிருந்தார். அந்தப் பெட்டியில் அவர்கள் இருவரையும் தவிர வேறு யாரும் இல்லை.

சரியாக இரவு எட்டேகால் மணிக்கு நீலகிரி எக்ஸ்பிரஸ் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பிற்று.

சுமார் பதினைந்துநிமிஷம் இருவரும் மௌனமாகவே இருந்தனர். அந்தப் பதினைந்து நிமிஷம் ஒரு யுகம்போல இருந்தது. சுந்தரவதனனால் அதற்குமேல் அந்த மௌனத்தைத் தாங்க முடியவில்லை. "சையத் காதர் என்பது தாங்கள்தானே?" என்று பேச்சை ஆரம்பித்தான்.

அவன் பேச்சைக் கேட்டு மற்றவருக்கு ஏதோ சந்தேகம் தோன்றியிருக்கிறது. அதனால் அவர் பதில் கொடுப்பதற்குச் சற்று தாமதமாயிற்று. "உங்கள் பெயர் எப்படி எனக்குத் தெரிந்தது என்று ஆச்சரியப்படுகிறீர்களோ? அதெல்லாம் வெகு சுலபம். எதையும் கவனித்துப் பார்க்கும் திறமை கொஞ்சம் இருந்தால் போதும்" என்று அவன் சற்றுப் பெருமையோடு கூறினான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை......நான் என்னவோ யோசனை செய்து கொண்டிருந்தேன்.......ம்....தாங்கள் எதுவரையிலுமோ?" என்று சையத் காதர் கேட்டார்.

"ரொம்ப தூரம் ஒன்றுமில்லை. சும்மா அப்படியே புறப்பட்டேன்" என்று அனாயாசமாகப் பதில் கூறினான் சுந்தரவதனன். பதில் கூறிவிட்டு அவன் யோசனையில் ஆழ்ந்தான். "இந்த மனிதன் குரல் பழகின குரலாகத்

தெரிகிறதே, இவனை எங்கு பார்த்திருக்கிறேன்? பார்த்திருக்கிறதாகக் கொஞ்சங்கூடத் தெரியவில்லையே? மனிதர்களுக்குள்ளே இப்படிக் குரலொற்றுமை எவ்வளவிருக்கிறது பார்த்தாயா? இதை நான் இது வரையிலும் தெரிந்து கொள்ளாதது ஆச்சரியந்தான்" என்று அவன் தன்னைத்தானே கடிந்து கொண்டான்.

"இப்பொழுதெல்லாம் ரயில் பிரயாணம் அவ்வளவு ஜோர் இல்லை. திருட்டு ரொம்ப ஜாஸ்தியாயிட்டுது. கூடப் பிரயாணம் செய்பவர்களையே நம்ப முடிகிற தில்லை" என்று சையத் காதர் தமக்குத்தாமே சொல்லிக் கொண்டார்.

'திருட்டு' என்ற வார்த்தையைக் கேட்டதும் சுந்தரவதனன் திடுக்கிட்டுப் போனான். ரயிலிலே நடை பெறும் பயங்கரத் திருட்டுக்களைப் பற்றி அவன் பத்திரிகையிலே ஒன்றைவிடாமல் படித்திருக்கிறான். அவையெல்லாம் ஒரே வெள்ளமாக அவன் நினைவிலே வந்தன.

"அப்பா, ஒரு ரயில் பெட்டியிலே தனியாக அகப் பட்டுக்கொண்டு எத்தனைபேர் திருட்டுக்கும் கத்திக் குத்துக்கும் ஆளாகிறார்கள்! பணம் போனாலும் சனியன் தொலையட்டும். உயிருக்குக்கூட ஆபத்து வருகிறதே" என்று அவன் தன்னையறியாதுபேசிக் கொண்டிருந்தான்.

"என்ன ஸார், திருட்டுன்னா உங்களுக்கும் பயந்தானே?" என்று சிரித்துக்கொண்டே கேட்டார் சையத் காதர்.

அப்பொழுதுதான் சுந்தரவதனனுக்குத் தான் தன் மன நிலைமையைக் வெளியே காட்டிக்கொண்ட விஷயம்

புல்னுயிற்று. இருந்தாலும் அதை வார்த்தையாலும் ஒப்புக்கொள்ளாமல், "இல்லே, சாகெப், அப்படியெல்லாம் நான் பயப்படுகிற ஆசாமியல்ல" என்று மிடுக்காகச் சொன்னுன்.

சாகெப்புக்கு அந்தப் பதில் திருப்தியளிக்கவில்லே. "உண்மையிலேயே இவன் பயப்படாத ஆசாமியா அல்லது அப்படிப் பாவனை செய்கிருனு? அல்லது இவனே ஒரு திருடனுக இருந்தால்—இப்படிக் கூடவே வந்து இனிமையாகப் பேசித் திருடுகிறதைப் பற்றி எத்தனையோ தடவை படித்திருக்கிறேனே? இந்தப் பெட்டியிலே என்னையும் அவனையும் தவிர வேறு யாருமே இல்லேயே? தூங்கிய பிறகு இவன் தனது கைவரிசையைக் காட்டிவிட்டால்? எதற்கும் இப்பொழுதே எச்சரிக்கையாக இருக்க வேண்டும்" என்று இப்படித் தீவிரமாக எண்ணமிட்டார். அதனுல்தான் அவர் அப்படிப் பயங்கரமாகப் பேசவும் நடக்கவும் தொடங்கினுர்.

"என்ன, உமக்குப் பயமில்லேயா? ரயில் திருட்டைப் பற்றியெல்லாம் கேள்விப்பட்டால் பயமே அறியாதவன் கூடப் பயப்பட்டுப் போகவேணுமே? அமானுல்லாகான் தெரியுமா உமக்கு?" என்று அவர் கூர்ந்த பார்வையோடு கேட்டார்.

"யார், ஆப்கானிஸ்தானத்துக்கு முன்னே ராஜாவாக இருந்தவரா?"

"ஆமாம். அவரேதான். சமீபத்திலே அவர் ஐரோப்பாவில் ரயிலிலே போகிறபோது இரண்டாயிரத்து இரு

நூறு பவுனை அவரிடத்திலிருந்து எவனோ அபகரித்துக் கொண்டு போய் விட்டானாம்."

"பணத்தோடுதானே தொலைந்தான்? அமானுல்லாவுக்குப் பணத்துக்குக் குறைச்சலா என்ன?" என்று அசட்டையான குரலில் பேசுவதுபோல சுந்தரவதனன் பாசாங்கு செய்தான்.

சையத் காதருக்கு அது மேலும் சந்தேகத்தை உண்டாக்கியது "இவன் திருட்டைப் பற்றி அசட்டையாகப் பேசுகிறானே? பார்வையைப் பார்த்தாலும் ஏதோ திருட்டு விழியாகத் தெரிகிறது. பயமா அல்லது திருட்டுப் பாசாங்கா?" என்று இப்படி மேலும் சந்தேகம் வலுத்தது.

"பணம் மட்டுமா போச்சு? உயிர் தப்பியதே பெரிய காரியமாய் விட்டது" என்று கொஞ்சம் கற்பனையும் கலந்து வீசினார் சையத்காதர். திருட்டைப் பற்றியே தொடர்ந்து பேசி ஆளை அளந்து பார்த்துவிட வேண்டும் என்பது அவருடைய எண்ணம்.

"பத்திரிகையிலே அப்படி வரவில்லையே? வந்திருந்தால் என் கண்ணில் படாமல் இருக்காதே?" அதே அசட்டைக் குரலில் சுந்தரவதனன் கூறினான். ஆனால், நெஞ்சு மட்டும் திக்திக் கென்று அடித்துக் கொண்டது.

"பத்திரிகையில் வெளியாகாமல் அப்படியே அமுக்கி விட்டார்கள். அந்த ரகசியம் எனக்குத் தெரியும். நம்ம ஆள் ஒருத்தன் எனக்கு அதை எழுதினான்."

"இப்படியெல்லாம் ஐரோப்பாவிலே நடந்தாலும் நம்ம நாட்டிலே நடக்காது. நம்ம திருடர்கள் கொலை

பாதகர்கள் அல்ல. பணத்தை எடுத்தாலும் ஆளை ஒன்றும் செய்யமாட்டார்கள்" என்று சுந்தரவதனன் தனக்குத் தானே தைரியம் கொடுத்துக் கொள்ளச் சொல்லிக் கொண்டான்.

அவனுக்கு அந்தத் தாடிக்காரன் திருடன்தான் என்கிற எண்ணம் நிமிஷத்துக்கு நிமிஷம் வலுத்துக் கொண்டிருந்தது. திருடனாக இல்லாவிட்டால் அமானுல்லாவைத் தாக்கியது அவனுக்கு எப்படித் தெரியும்? அப்படித் திருடனாக இருந்தால் பணத்தோடாவது தொலையட்டும் என்பது அவனுடைய நோக்கம். அதற்காகத்தான் பேச்சை அப்படி மாற்றினான். இருந்தாலும் அவனுடைய முகத்திலே மனத்திலேயிருந்த கலவரத்தின் சாயல் நன்றாகத் தெரிந்தது. அது மேலும் சையத்காதருக்குச் சந்தேகத்தை உண்டாக்கி விட்டது.

"நம்ம ஊரிலா ஒன்றும் செய்யமாட்டார்கள்? எவனாவது தனியாக ரயில் பெட்டியில் அகப்பட்டுக் கொண்டால் அவனை என்ன செய்தாலும் யாருக்குத் தெரியப் போகிறது? தூங்கும்போது கழுத்தை நெரித்து விட்டுக் கொள்ளையடித்தால் என்ன செய்ய முடியும்?" என்று சையத் காதர் கேட்டார்.

இந்த வார்த்தைகளை அவர் பேசினார் என்பதைவிட அவருடைய பயம் பேசிற்று என்று சொன்னால் மிகப் பொருத்தமாக இருக்கும். மனத்திலெழுந்த பயம் அப்படி அவரையும் மீறிக்கொண்டு வெளிவந்து விட்டது.

" தூங்கும்போது கழுத்தை நெரிக்கிறதா? யார் தூங்கப் போகிறார்கள், பார்க்கலாம்? தூங்குவதற்கு

முன்னதாகவே சரியான காரியம் நான் செய்து காண்பிக்கிறேன்" என்று சுந்தரவதனன் எழுந்தான். அபாய அறிவிப்புச் சங்கிலியைப் பிடித்து இழுத்து ரயிலை நிறுத்த வேண்டுமென்பது அவனுடைய எண்ணம். அதற்காக அவன் முன்னாலே கையை நீட்டிக்கொண்டு காலை எட்டி வைத்தான்.

அவன் உருட்டி விழிப்பதையும், கையை நீட்டுவதையும் கண்ட சையத் காதருக்கு அவன் தன்னைத் தாக்க வருவதாகவே புலப்பட்டது. உடனே தற்காப்புணர்ச்சியால் தூண்டப்பட்டு அவர், "டேய், அப்படியே நில். இன்னும் ஓரடி காலை எடுத்து வைத்தால் உயிரை வாங்கி விடுவேன்" என்று கர்ஜனை புரிந்து கொண்டே எழுந்தார். மீசையை முறுக்கினார். தாமணிந்திருந்த கோட்டின் கைகளை மேலே மடக்கிக்கொண்டு விறைப்பாக நின்றார்.

சுந்தரவதனன் திருடனென்பதில் அவருக்கு இப்பொழுது சந்தேகம் துளிகூட இல்லை. "இப்படிப் பேசியாவது அவனிடமிருந்து தப்பப் பார்க்கலாம்" என்று நினைத்தார். ஆனால், அவர் எதிர்பாராத விதமாகக் காரியம் நடந்தது.

"ஐயோ, திருடன் திருடன்,—என் உயிர் போச்சே" என்று அலறிக்கொண்டு மூர்ச்சை போட்டுத் தடாலென்று படுக்கையிற் சாய்ந்தான் சுந்தரவதனன்.

சையத் காதர் நடுங்கிப் போனார். "அடே, இவன் என்னையா திருடனென்று நினைக்கிறான்? இவன் திருடனல்லவா?" என்று கூறிக்கொண்டே சுந்தரவதனன் அருகில் வந்தார். அவன் முகம் இருளடைந்து பயங்கர

மாகத் தோன்றியது. உடம்பில் உயிர் இருப்பதற்கான அறிகுறிகள் ஒன்றுமே தென்படவில்லை.

சையத் காதருக்கு இப்பொழுது வேறொரு விதமான பயம் பிடித்துக் கொண்டது. “இவன் செத்துப் போனால் அதற்கு நானல்லவா ஜவாப்தாரியாக வேண்டும்? என்னால் தானே இவன் இறந்தான்?”

சையத் காதருக்கு என்ன செய்வதென்று புலப்பட வில்லை. அவர் உடம்பெல்லாம் வெடவெட வென்று நடுங்கிற்று. மூச்சுத் திணறிற்று. “அடடா, கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டு விட்டதே” என்று பதை பதைத்து அபாய அறிவிப்புச் சங்கிலியைப் பிடித்து இழுத்தார். ஏன் அப்படிச் செய்ய வேண்டுமென்று அவர் யோசிக்கவே இல்லை.

வேகமாக ஓடிக் கொண்டிருந்த நீலகிரி எக்ஸ்பிரஸ் கொஞ்ச தூரத்திற்குள் வேகம் குறைந்து சடக்கென்று நின்றது. ரயில்வே போலீசார் ஓடிவந்தார்கள்; மற்றவர்களும் கீழிறங்கி என்ன விஷயம் என்று காண விரைந்தார்கள்.

போலீசார் உள்ளே நுழையும்போதே சையத் காதர், “ஐயா இவர் ஏனோ திடீரென்று மூர்ச்சை போட்டு விழுந்து விட்டார். மார்படைப்போ என்னவோ தெரியவில்லை” என்று பயத்தைச் சமாளித்துக் கொண்டு கூறினார்.

“டாக்டர் யாராவது இருந்தால் கூப்பிடுங்கள்” என்று யாரோ கூவினார்கள்.

“முகத்திலே தண்ணீரைத் தெளியுங்கள்” என்று வேறு யாரோ சொன்னார்கள்.

ஒரு போலீஸ்காரன் தண்ணீரைத் தெளித்து மின்சார விசிறியை சுந்தரவதனன் பக்கம் திருப்பினுன். மற்ருருவன் சையத் காதரைக் கேள்விகள் கேட்கத் தொடங்கினுன். "ரயில் புறப்படும்போதே அவர் தமது மார்பிலே இடதுபக்கம் கையை வைத்து அழுத்திக் கொண்டிருந்தார். சற்று முன்பு திடீரென்று மூர்ச்சை போட்டுவிழுந்து விட்டார். அதைக் கண்டதும் நான் அபாயஅறிவிப்புச் சங்கிலியை இழுத்தேன்" என்று அவர்விளக்கம் கூறினுர். செத்துப்போனவன் எழுந்து வந்து மறுக்கவா போகிருன் என்று அவருடைய பதை பதைக்கும் நெஞ்சம் எண்ணமிட்டது. சற்று முந்தி வரையிலும் அவர் சுந்தரவதனன் செத்துப்போவதைத் துளிகூட விரும்பவில்லை. போலீஸ் வந்ததிலிருந்து அவன் செத்துப்போனுல் நல்லதென்று அவருக்குத் தோன்றியது.

ஆனுல், சுந்தரவதனனுக்கு உயிர் போய்விடவில்லை. முகத்திலே தண்ணீர் பட்டதும் மூர்ச்சை தெளிந்து சுய நினைவு வர ஆரம்பித்தது. சையத்காதர் கூறிய கடைசி வார்த்தைகள் நன்ருக அவன் காதில் ஒலித்தன.

"அந்தத் திருடனை விடாதீர்கள். பிடித்துக் கொள்ளுங்கள். அவன்தான் திருடன்" என்று அவன் கத்த ஆரம்பித்தான்.

போலீஸ்காரர்கள் சையத்காதரை இறுகப் பிடித்துக் கொண்டார்கள். "ஐயா, நான் திருடனல்ல; திருடனுக இருந்தால் நானே சங்கிலியைப் பிடித்து இழுத்து ரயிலை நிறுத்துவேனு? நிறுத்தியதுமல்லாமல்

நீங்கள் வரும்வரையில் பெட்டிக்குள்ளேயே இருப்பேனா?" என்று திடமாகப் பேசினார்.

"யார், நீயா சங்கிலியைப் பிடித்து இழுத்தது? நானல்லவா இழுத்தேன்? சங்கிலியை இழுத்ததைக் கண்டு என்னை நீ தாக்கக்கூடாதென்பதற்காக மூர்ச்சையானதுபோல் பாசாங்கு செய்தேன்" என்று சுந்தரவதனன் கூறினான். அவனுடைய கற்பனைத் திறம் முழுவதும் இப்பொழுது உதவிக்கு வந்துவிட்டது.

பிறகு சையத்காதர் எவ்வளவு கூறியும் பயனிருக்கவில்லை. அவர் வார்த்தையை யாரும் நம்பவில்லை. போலீஸ்காரர்கள் அவருடைய பெயரை இதற்குள்ளேயே ரிசர்வேஷன் சீட்டிலிருந்து அறிந்து கொண்டிருந்தும் வழக்கம்போலக் கேள்விகள் கேட்கத் தொடங்கினார்கள். "உன் பெயரென்ன?" என்று ஒரு போலீஸ்காரன் கேட்டான்.

"சுயதரிசனம்" என்றார் சையத்காதர். மற்றொரு போலீஸ்காரன் அவர் முதுகிலே ஓங்கி ஒரு குத்து விட்டான்.

"ஏண்டா, பெயர் கேட்டால் பொய்யா சொல்றே?" என்று அவன் கர்ஜித்தான்.

"இல்லை : ஐயா, என் பெயர் அப்துல் காதர்" என்றார் நடுங்கிக்கொண்டே.

மறுபடியும் ஒரு குத்து விழுந்தது. அப்பொழுது தான். "இல்லை ஐயா, என் பெயர் சையத்காதர்" என்ற பதில் வந்தது.

“இவன் பலே கைதி; முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைக்கின்றவன்” என்று விளக்கம் கூறினான் ஒரு போலீஸ்காரன்.

சையத் காதரைக் கைது செய்து கைக்கு விலங் கிட்டார்கள்.

அரைமணி நேரம் காலம் தாழ்த்து நீலகிரி எக்ஸ் பிரஸ் அரக்கோணம் ஜங்ஷன் வந்து சேர்ந்தது.

சையத் காதரை அங்கே இறக்கினார்கள். சுந்தர வதனன் அரக்கோணம் வரையில்தான் டிக்கெட்டு வாங்கியிருந்ததால் அவனும் அங்கேதான் இறங்க வேண்டும்.

போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரிடம் வாக்குமூலம் கொடுத்துவிட்டுச் செல்லலாமென்று அவனை அழைத்துச் சென்றார்கள். சையத் காதரையும் கைவிலங்கோடு போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்தார்கள்.

சப்-இன்ஸ்பெக்டருடைய கொடூரமான முகத்தைப் பார்த்ததும் சையத்காதருக்கு உள்ள தைரியமும் போய்விட்டது. இனிமேல் உண்மையை ஒப்புக் கொள்ளாமல் வழியில்லை என்று தெரிந்தது.

ஆதலால் அவர் நடந்தது முழுவதையும் ஒளிக் காமல் கூறுவதாகத் தாமாகவே கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். சப்-இன்ஸ்பெக்டர் அதற்கு சம்மதிக்கவே அவர் சொல்ல ஆரம்பித்தார்:

“ஐயா, எனக்கு நெடுநாளாகவே ஒரு ஆசை உண்டு. அதாவது வாழ்க்கைச் சம்பவங்களை யெல்லாம் நேரில் பார்த்துக் கதை எழுதவேண்டுமென்பது அந்த ஆசை.

அதற்காகவே இன்று நான் புறப்பட்டேன். இந்த ஆசாமியுடன் தனியாக முதல் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்யத் தற்செயலாக நேர்ந்தது. பேச்சு எப்படியோ ரயில் திருட்டைப்பற்றி ஆரம்பித்தது. திருடர்கள் வந்தாலும், அவர்கள் பயமுறுத்தினாலும் தனக்குப் பயமுண்டாகாது என்ற தோரணையிலே இவர் பேசினார். இவரே ஒரு திருடன்தானோ என்று எனக்குப் பயமுண்டாகிவிட்டது. நான் தூங்கியபிறகு எனக் கேதேனும் தீங்கு செய்துவிட்டால் என்ன செய்வ தென்று பயமடைந்தேன். இவர் நடந்துகொண்ட மாதிரியில் என்னுடைய பயம் இன்னும் அதிகரித்தது. இந்த ஆசாமி திருடன்தான் என்று நான் நிச்சயமாக நம்பினேன். அதனால், இவரிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்காவே இவரை மிரட்டுவதைப்போலப் பேசினேன். இவர் அப்படித் திடீரென்று மூர்ச்சை போட்டு விழுவாரென்று நான் எதிர் பார்க்கவில்லை. அத்தனை கோழை என்று எனக்கு முதலில் தெரியாது போயிற்று. இவர் மூர்ச்சைபோட்டு விழவே எனக்கு வேறொருவிதமான பயம்பிடித்துக் கொண்டது. இவரைக் காப்பாற்றும் நல்லெண்ணத்தோடுதான் நான் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுத்தேன். இதுதான் நடந்த விஷயம். உண்மையில் என் பெயர் சையத் காதர் அல்ல. யாருக்கும் தெரியாமல் சென்று வாழ்க்கையை நேருக்கு நேராகக் காணவே இந்த வேஷம் போட்டேன். என் பெயர் சுயதரிசனம் தான்" என்று கூறிக்கொண்டே அவர் தம் பொய்த் தாடி மீசைகளையும் எடுத்தார்.

"ஆ, என் நண்பன் சுயதரிசனமா? நானும் உன்னைப்போலத்தாண்டா வந்தேன்" என்று கூவிக்

கொண்டே சுந்தரவதனன் ஓடி அவனைத் தழுவிக் கொண்டான்.

"நீ என் நண்பனு?" என்று திடுக்கிட்டுக் கத்தினுன் சுயதரிசனம்.

"ஆமாம்; நான்தான் அனுபவமூர்த்தி" என்று கூறிக்கொண்டே அவன் தனது மூக்குக் கண்ணுடி, பொய்ப் பல், எட்டுக்கால் பூச்சி மீசை எல்லாவற்றையும் களைந்தான்.

"அடே அனுபவமூர்த்தி, நாம் நெடுநாளாகப் போட்டதிட்டம் இப்படி அசம்பாவிதமாகவா முடிய வேணும்? நீ இன்று புறப்படுவதாக எனக்கு ஒரு பேச்சுச்கூடச் சொல்லவில்லையே" என்று சுயதரிசனம் தேம்பினுன். அனுபவமூர்த்தி கண்களிலும் நீர் தாரைதாரையாகப் பெருக்கெடுத்தது.

எதிர்பாராத இந்த நிகழ்ச்சிகளைக் கண்டு சப்-இன்ஸ்பெக்டரும், போலீஸ்காரர்களும் கொல்லென்று சிரித்துவிட்டார்கள்.

"எழுத்தாளர் சிகாமணிகளே உங்களுக்கு வேஷம் போட இவ்வளவு நன்ருக எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார் சப்-இன்ஸ்பெக்டர். அவருக்கு அவர்களிடம் இப்பொழுது அனுதாபம் பிறந்துவிட்டது.

"ஸார், நாங்கள் ஒரு அமெச்சூர் நாடகசபையில் அங்கத்தினர்கள். வேஷம் போடுவதில் இரண்டுபேரும் கெட்டிக்காரர்கள். இரண்டுபேரும் ஒரே பத்திரிகையில்தான் வேலை செய்கிருேம். நெடுநாளைய நண்பர்கள் நாங்கள்" என்று இரண்டுபேரும் ஒரே சமயத்தில் கூறினுர்கள்.

"சரி சரி, இப்போ எல்லாம் விளங்கிவிட்டது. ஆனால், அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுத்ததுதான் யாரென்று இன்னும் நிச்சயமாகவில்லை" என்று சப்-இன்ஸ்பெக்டர் புன்னகையோடு சொன்னார்.

"அது நானல்ல. அவன்தான் ஸார்" என்று அனுபவமூர்த்தி ஒப்புக்கொண்டான்.

"நீயே இழுத்ததாக முன்னால் சொன்னாயே ?"

"திருடன் மேலே குற்றம் நன்றாக ஏற்படட்டும் என்றுதான் அப்பொழுது கற்பனை செய்தேன். தயவு செய்து மன்னித்துவிடுங்கள்."

"எழுத்தாளருக்கு வேண்டிய கற்பனையெல்லாம் உங்களிடம் நன்றாக இருக்கத்தான் செய்கிறது" என்று கூறி சப்-இன்ஸ்பெக்டர் உரக்கச் சிரித்தார்.

அவர்கள்மீது கேஸ் ஒன்றும் எடுக்கப்படாவிட்டாலும் ரயிலை அனாவசியமாக நிறுத்தியதற்கு அபராதம் கொடுக்கவேண்டி ஏற்படலாம் என்றும், கோர்ட்டில் ஆஜராக வேண்டும் என்றும் அவர் எச்சரிக்கை செய்தார். அபராதம் எவ்வளவானாலும் கொடுத்துவிடத் தயாரென்றும், அவசியமானபோது ஆஜராவதாகவும் வாக்குக்கொடுத்துவிட்டு, அதோடு இந்தச் சம்பவத்தைப் பற்றிப் பத்திரிகைகளுக்குத் தெரிவிக்கக் கூடாதென்றும் அவர்கள் மன்றாடிக் கேட்டுக் கொண்டார்கள். சப்-இன்ஸ்பெக்டர் சம்மதம் தெரிவித்ததோடு போவதற்கு அனுமதியும் தந்தார். சுயதரிசனமும், அனுபவமூர்த்தியும் தோள்மேல் தோள் போட்டுக்கொண்டு வெளியே கிளம்பினார்கள்.

கைது செய்த போலீஸ்காரர்களில் ஒருவன் அவர்களைப் பார்த்து ஏதோ முணுமுணுத்துக்கொண்டு நின்றான்.

"ஏய்யா, நீ பிடித்த கேஸ் போய்விட்டதே என்று வருத்தமோ?" என்று வேடிக்கை பார்க்க வந்த யாரோ கேட்டார்கள்.

"அதுக்காக வருத்தமில்லை. இந்தமாதிரி அரைப் பயித்தியங்கள் எழுதுகிற கதைகளை நாம் படிக்க வேண்டியிருக்கிறதே—அதுதான் எனக்கு வருத்தம்" என்றான் அவன்.

இந்த வார்த்தைகள் சுயதரிசனம், அனுபவமூர்த்தி காதுகளில் விழாமல் இல்லை. ஆனால், அவர்கள் அவற்றைப் பொருட்படுத்தவில்லை.

# இரவு ஒரு மணி

நம் நாட்டிலே சுதந்திரப் போராட்டம் நடந்து கொண்டிருந்த காலத்திலே ஒரு நாள் இரவு ஒரு மணி. சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மக்வீல் திடுக்கிட்டு எழுந்தார். அவர் படுத்திருந்த அந்த நீளமான அறையின் மற்றொரு கோடியிலிருந்த இரும்புப் பெட்டியை யாரோ திறந்து, அதிலுள்ள காகிதங்களையும், கடிதங்களையும் அவசர மாகப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது தெரிந்தது. முதலில் அது யாரென்று அவருக்குப் புலப்படவில்லை. இரும்புப் பெட்டிக்குப் பக்கத்திலிருந்து ஒரு சிறு 'டார்ச்' விளக்கின் ஒளி மட்டும் வீசிக் கொண்டிருந்தது.

உடனே இன்ஸ்பெக்டர் தமது சுழல் துப்பாக்கியைக் கையில் எடுத்துக்கொண்டு மின்சார விளக்கைப் போட் டார். இரும்புப் பெட்டியைச் சோதனை செய்துகொண் டிருந்தாள் ஒரு மாது. திடீரென்று தோன்றிய வெளிச் சத்தைக் கண்டு அவள் கலவரத்தோடு திரும்பிப் பார்த்

தாள். அவள் வேறு யாரும் அல்லள்; மக்வீலின் வீட்டில் வேலைக்காரியாக இருந்த ஆண்டாள்தான்.

இன்ஸ்பெக்டர், "அங்கு என்ன செய்கிறாய்? உள்ளதைச் சொல்; இல்லாவிட்டால் உன்னை இலேசில் விடமாட்டேன்!" என்று கர்ஜித்தார். ஆண்டாள் மெதுவாக எழுந்தாள். அவள் முகத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தாலும், கண்களில் ஒருவிதமான உறுதி ஒளிவிட்டுக் கொண்டிருந்தது; அதே சமயத்தில் அவை பார்ப்போர் மனத்தை இளக்கி வசப்படுத்தக் கூடியனவாயும் தோன்றின.

இன்ஸ்பெக்டரை இவைகளெல்லாம் அசைக்க வில்லை; பணத்தின் சத்தம் தவிர வேறு எதுவும் அவரை இதுவரை அசைத்ததே இல்லை. "பெட்டியில் என்ன பார்த்துக் கொண்டிருந்தாய்? சொல்லு—இல்லா விட்டால்......" என்று மறுபடியும் அதட்டினார்.

வேலைக்காரி ஆண்டாள் கையைப் பிசைந்து கொண்டே அங்கே கிடந்த ஒரு பெரிய சாய்வு நாற்காலி அருகில் வந்தாள். சுழல் துப்பாக்கியுடன் நிற்கும் தனது எஜமானனைக் கல்லையும் கரைக்கக்கூடிய விதமாய் அவள் ஒரு பார்வை பார்த்தாள். நேராக நிற்கக்கூட அவளால் முடியவில்லை. அந்த நிலையில் அவளைக் கண்ட எவரும் அவள் கெட்ட எண்ணத்துடன் பெட்டியைத் திறந்திருப்பாள் என்று கூறவே மாட்டார்கள். இன்ஸ்பெக்டரோ அவளை மிக்க வெறுப்புடனும் கோபத்துடனும் பார்த்துக் கொண்டிருந்தார். அதைச் சகிக்க முடியாத ஆண்டாள் பெருமுயற்சி செய்து பேசலானாள்:

"கேவலம் ஒரு பெண்ணை இப்படிப் பயமுறுத்துவது சாமர்த்தியமானால், அப்படியே செய்யுங்கள்!"

"நீ ஒரு திருடி. உண்மையைச் சொல்லாவிட்டால், உன்னை என்ன செய்வேன் தெரியுமா ?"

"ஒரு பெண்ணையா இப்படிப் பேசுகிறீர் ? பெண் பிள்ளையிடத்திலா இப்படி வீரம் பேசுவது ?"

"பெட்டியில் என்ன தேடிக்கொண்டிருந்தாய் ? ஒன்றையும் ஒளிக்காதே ; சொல். ஒளித்தால்......"

இந்தத் தடவை அவர் இதற்குமேல் ஒன்றும் சொல்லவில்லை ; துப்பாக்கியை மட்டும் கொஞ்சம் கீழும் மேலும் ஆட்டிக் காண்பித்தார். ஆனால், இதற்கு ஒன்றும் பதில் இல்லை.

"சொல்லுகிறாயா ? இல்லாவிட்டால் ஸ்டேஷனிலிருந்து இரண்டு பேரைக் கூப்பிட்டு விலங்கு போடச் சொல்லட்டுமா ?"

அங்கே உண்டான சத்தத்தால் தூக்கம் கலைந்தெழுந்த குமாஸ்தா சின்னசாமி இந்தத் தருணத்தில் வேகமாக உள்ளே நுழைந்தான். நுழைந்ததும், "ஐயோ வேண்டாம் ; போலீஸைக் கூப்பிடவேண்டாம்!" என்று கெஞ்சும் ஆண்டாளின் பரிதாபக் குரல் அவன் காதில் விழுந்தது.

சின்னசாமி திடுக்கிட்டுப் போய்விட்டான். கொடூரமான பார்வையுடன் சுழல் துப்பாக்கியை நீட்டிக்கொண்டிருந்த தன் எஜமானனை ஐயத்தோடு நோக்கினான். மறு நிமிஷம் அவன் பார்வை ஆண்டாள் மேல் விழுந்தது. கடுமையான வெயிலில் சோர்ந்து தொங்கும் இளந் தளிர்

போல அவள் சாய்வு நாற்காலியை ஆதாரமாகப் பிடித்துக்கொண்டு நின்று கொண்டிருந்தாள். சின்ன சாமிக்கு அவள் மேல் எவ்விதமான சந்தேகமும் ஏற்பட வில்லை. அதற்கு மாறாக அவனையறியாமல் ஒருவித இரக்கமே பிறக்கலாயிற்று.

அப்பொழுது மக்வீல் " உள்ளதைச் சொல்லிவிடு ; இல்லாவிட்டால் இதோ—" என்று கூறிக்கொண்டே டெலிபோன் கருவியிடம் சென்றார்.

" வேண்டாம், உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள் கிறேன். நான் இதோ இவர் முன்னிலையில் எல்லாம் சொல்லிவிடுகிறேன் ; போலீஸை மட்டும் கூப்பிடவேண் டாம் !" என்று ஆண்டாள் இரங்கிய குரலில் கூவினள். அவளுடைய கண்கள், 'எனக்கு உதவி இல்லையா ?' என்று பணிந்து கேட்பன போலச் சின்னசாமியை நோக்கின. அந்தப் பார்வை அவன் மனத்தைக் கவர்ந்து விட்டது. அவனுக்கு இப்பொழுது ஆண்டாளுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதைத் தவிர வேறு எந்த எண்ணமும் இல்லை. அவளுக்கு உதவி செய்வதில் தனக்குத் தீங்கு ஏற்படுவதாக இருந்தாலும் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. உடனே, 'நீர் டெலி போனில் பேசக்கூடாது !' என்று தன் எஜமானனைத் தடுத்தான். மக்வீலுக்கு மூக்கிற்குமேல் கோபம் வந்து விட்டது. " ஏதாவது குறுக்கே பேசினல் உன்னை டிஸ்மிஸ் பண்ணிவிடுவேன். ஜாக்கிரதை !" என்று உறுமிவிட்டு டெலிபோன் கருவியைக் கையில் எடுத்தார்.

" எல்லாம் கூறிவிடுகிறேன்....போலீஸைக் கூப்பிட வேண்டாம் !" என்று ஆண்டாள் மறுபடியும் கதறினள்.

அதே கணத்தில் சின்னசாமி சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கையிலெடுத்த டெலிபோன் கருவியைப் பிடுங்கிக் கம்பியை அறுத்தெறிந்து விட்டான்.

இதை மக்வீல் எதிர்பார்க்கவில்லை. "அடே, உன்னை டிஸ்மிஸ் செய்கிறேன்! தொலை! இங்கு நில்லாதே!" என்று வெறுப்புடன் கூறிவிட்டு, ஆண்டாளைப் பார்த்து, "உம்...உள்ளதைச் சொல்லிவிடு : இல்லாவிட்டால் உன்னைச் சும்மா விட்டுவிடுவேன் என்று நினைத்துவிடாதே!" என்றார்.

ஆண்டாள், செந்நாய்களிடையில் அகப்பட்ட சிறு மானைப் போல, இனித் தப்ப முடியும் என்ற நம்பிக்கையையே இழந்தவளாகக் காணப்பட்டாள். அவள் முகத்தில் அசிரத்தை பிறக்கலாயிற்று. "நான் இனி எப்படியும் தப்பமுடியாது. ஆனால், நான் ஒரு குற்றமும் செய்யவில்லை என்பதை உங்கள் முன்னிலையில் கூறிவிடுகிறேன். பிறகு அவர் தம் இஷ்டப்படி செய்து கொள்ளட்டும்" என்று சின்னசாமியைப் பார்த்துக் கூறலானாள். "என் தகப்பனார் சீனிவாச நாயுடு மதுரை ஜில்லாவில் ஒரு கிராமத்தில் வசிக்கிறார். அவருக்கு தேச சேவையாக ஏதாவது செய்ய வேண்டும் என்ற ஆசை உண்டு. இந்தச் சென்னை நகரத்தில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் 'பாரத சேவைக் கழகம்' நாட்டின் விடுதலைக்காக நல்ல வேலை செய்கிறது என்று கேள்விப் பட்டு, அவர் அதற்குப் பல தடவைகளில் பொருளுதவி செய்துவந்தார். ஆனால், அவர் நேரில் இங்கு வந்து அந்த ஸ்தாபனத்தைப் பார்த்ததில்லை ; அதில் சம்பந்தப் பட்டவர்களை நேரில் சந்தித்ததுகூடக் கிடையாது—தேச சேவை என்றால் அவருக்குப் பற்று அதிகம்—பணம்

கொடுக்கும் விஷயமாகமட்டும் அவர் பாரத சேவைக் கழகத்துடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருந்தார்.

"சில நாட்களுக்கு முன்பு அக்கழகத்தில் சம்பந்தப்பட்ட சிலர் புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் என்று கண்டுபிடிக்கப்பட்டிருப்பது உங்களுக்குத் தெரியும். அது விஷயமாகக் கழகக் காரியாலயத்தைச் சோதனை செய்தபொழுது என் தகப்பனார் எழுதிய மூன்று கடிதங்கள் சர்க்கிள் இன்ஸ்பெக்டருக்குக் கிடைத்து விட்டன. அவைகளை வைத்துக்கொண்டு இவர் என் தந்தையைப் பயமுறுத்துகிறார்.

"என் தந்தையோ புரட்சி இயக்கம் என்றாலே வெறுப்பவர். காந்தியடிகளின் அகிம்சைத் தத்துவமே சுயராஜ்யம் அடையும் வழி என்பதோடு அதுவே மக்கள் அனைவரும் என்றும் கைக்கொள்ளவேண்டிய சிறந்த கொள்கையாகவும் இருக்கவேண்டும் என்ற எண்ணமுடையவர் அவர். புரட்சி இயக்கத்தினர் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்று கொஞ்சம் சந்தேகப்பட்டிருந்தாலும் அவர் இவ்வியக்கத்திற்கு எவ்வித உதவியும் செய்திருக்கமாட்டார். அதோடு கழகத்தை வெளிப்படையாகவும் கண்டித்திருப்பார்.

"இப்பொழுது இவர் என் தந்தையைப் பத்தாயிரம் ரூபாய் கேட்கிறார்; கொடுக்காவிட்டால் வழக்கில் சேர்த்துவிடுவாராம். அந்த மூன்று கடிதங்களும் இவருக்குத் தக்க ஆதாரங்களாக இருக்கின்றன. புரட்சி இயக்கத்திற்குப் பண உதவி புரிந்ததற்காக என் தந்தையைப் பத்து வருஷத்திற்குக் கூடத் தண்டிக்கலாமாம்.

"பத்தாயிரம் ரூபாய் என் தந்தையால் கொடுக்க முடியும்: ஆனால், அவர் இப்படி அநியாயமாக ஒரு காசு கொடுக்கவும் மறுக்கிறார். வழக்கில் சம்பந்தப் படுத்தினால் சிறைக்குப் போகத் தயார் என்று பிடிவாத மாகக் கூறிக்கொண்டிருக்கிறார்.

"இந்தச் சம்பவங்களெல்லாம் எனக்குக் கடித மூலமாகத் தெரிந்தன. நான் இங்கு ராணி மேரி கல்லூரியில் வாசித்துக் கொண்டிருந்தேன். எனக்கு எப்படியாவது என் தகப்பனாரை விடுவிக்கவேண்டும் என்ற உறுதி உண்டாயிற்று.

"விஷயம் இப்படி இருக்கும்பொழுது இவர் தமக்கு ஒரு வேலைக்காரி வேண்டும் என்று பத்திரிகையில் விளம் பரப் படுத்தினார். அதைப் பார்த்த நான் வேலைக்காரியாக அமர்ந்தால் அந்தக் கடிதங்களைக் கைப்பற்றச் சமயம் கிடைக்கும் என்று நினைத்து அப்படியே செய்தேன். என்னை யாரென்று இவர் கண்டுகொள்ள முடியவில்லை.

"கடிதங்களை யெல்லாம் இரும்புப் பெட்டியில் வைத்திருப்பதைக் கொஞ்ச நாட்களில் தெரிந்துகொண் டேன். இன்று இரவு 9–மணிக்கு இவருக்குப் பால் கொண்டு வந்தபொழுது இரும்புப்பெட்டியின் சாவி மேஜைமேலே கிடந்தது. இவர் அதைக் கவனிக்காமலே படுத்துக் கொண்டார். அதைக் கண்ட நான் சுமார் ஒரு மணிக்குப் பெட்டியைத் திறந்து கடிதங்களை எடுக்க முயன்றேன்."

இங்கு அவள் குரல் மாறியது அவள் குழறிக் குழறிப் பேசலானாள்.

"ஆனால், அது பலிக்கவில்லை. இனி என் தந்தைக்கு வேறு கதியில்லை. அவரோ பணம் கொடுக்கக் கண்டிப்பாக மறுப்பார். அதனால் அவர் —எனது அருமைத் தந்தை — தமது அந்திய காலத்தைச் சிறையில் கழிக்க வேண்டியதுதான். பத்து வருஷங்களாம்! தள்ளாத காலத்தில் அவர் சிறையிலே கிடக்கவும் நான் அவரை விட்டு......"

இதற்கு மேல் அவளால் ஒன்றும் பேச முடியவில்லை. மூச்சுத் தடுமாறுவதுபோல் காணப்பட்டது. மறு நிமிஷம் அவள் திண்டாடிக்கொண்டு சாய்வு நாற்காலியின் பின்னால் விழப்போனாள்.

அவன் கூறியவற்றை யெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த சின்னசாமிசட்டென்று பாய்ந்து அவளைக் கீழே விழாமல் தாங்கினான். ஆண்டாளும் அவளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

சிறிது நேரம் சென்றது. ஆண்டாள் மூர்ச்சை தெளிந்து எழுந்தாள். மக்வீல், "அதெல்லாம் இருக்கட்டும், கடிதங்களை எடுத்தாயா ?" என்று கேட்டார்.

"எடுக்கவில்லை ; அதற்குள்தான் பார்த்து விட்டீரே !"

"நான் இப்பொழுது சோதனை செய்யப்போகிறேன். பிறகு நீ இங்கிருந்து மரியாதையாகப் போய்விட வேண்டும், இரண்டு சனியன்களும் தொலையுங்கள் !" என்றார் இன்ஸ்பெக்டர்.

"தெய்வமே !" என்று ஆண்டாள் பெருமூச்சு விட்டு விட்டு, "சரி, உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள்" என்றாள்.

அவள் தன்னையே மறந்தவள்போல் நின்றுகொண்டிருந்தாள். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் அவளைச் சோதித்தார். கடிதம் ஒன்றும் அகப்படவில்லை. பிறகு அவர் திருப்தியோடு, "உம் போகலாம்!" என்றார்.

இருவரும் மௌனமாக வீட்டைவிட்டு வெளியே வந்தார்கள். அங்கே வாடகை மோட்டார் ஒன்று நின்றுகொண்டிருந்தது. ஆண்டாள் சின்னசாமியை அதிலே ஏறும்படி சமிக்கை செய்துவிட்டுத் தானும் ஏறிக்கொண்டாள்; மோட்டார் புறப்பட்டது.

சிறிதுநேரம் இருவரும் பேசவில்லை. மோட்டார் பறந்து கொண்டிருக்கிறது. கடைசியாக, "நாம் எங்கே போகிறோம்?" என்றான் சின்னசாமி.

"இன்னும் பத்து நிமிஷத்தில் மதுரைக்குப் புறப்படுகிற வண்டிக்கு" என்றாள் ஆண்டாள்.

சின்னசாமி பெருமூச்சு விட்டான். "என்னால் உங்களுக்கு வேலை போயிற்றே!" என்று ஆண்டாள் இரக்கப்பட்டாள்.

"வேலை போனால் போகிறது; ஆனால், உனக்கு உதவிசெய்ய முடியவில்லையே!" என்று அவன் கவலையோடு கூறினான்.

"ஏன், உங்கள் சட்டைப் பையைப் பாருங்கள்" என்று ஆண்டாள் கூறிப் புன்னகை செய்தாள்.

சின்னசாமி பையில் கைவிட்டான்; அங்கு மூன்று கடிதங்கள் ஒன்றாகக் கட்டப்பட்டுக் கிடந்தன.

"இவையே நான் வேண்டிவந்த கடிதங்கள்" என்றாள் ஆண்டாள். அவள் கண்களில் வெற்றி விளையாடியது.

சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மக்வீல் தன்னைச் சோதனை செய்யாமல் விடமாட்டார் என்பதை நன்கு அறிந்திருந்த ஆண்டாள் மூர்ச்சைபோட்டு விழுவதாகப் பாவனை செய்தாள். சின்னசாமி எப்படியும் தன்னை மூர்ச்சை தெளிவிக்க வருவான் என்பதில் அவளுக்குச் சந்தேகமே இல்லை. அவன் தன்னைக் கீழே விழாமல் பிடிக்க வந்ததும் ஆதரவுக்காக ஆண்டாள் அவனைப் பிடிப்பதுபோல் பாவனை செய்துக்கொண்டு மெல்லத் தன் மடியில் வைத்திருந்த கடிதங்களை அவன் சட்டைப்பையில் போட்டு விட்டாள். சின்னசாமி அவளை மூர்ச்சை தெளிவிக்க வேண்டும் என்று அதிலேயே கருத்தைச் செலுத்திக் கொண்டிருந்ததால் இதைக் கவனிக்கவில்லை; நல்ல வேளையாக அங்கே கிடந்த பெரிய சாய்வு நாற்காலி ஆண்டாளின் செய்கையை மக்வீலின் கண்களினின்றும் மறைத்துவிட்டது.

பிறகு எல்லாம் சுலபமாக முடிந்தன. மோட்டார் காரையும் ஆண்டாள் முன்னதாகவே தயாராக வர வழைத்திருந்தாள்.

# கால யந்திரம்

எனது பழையநாட்குறிப்பு நோட்டுப் புத்தகத்தைத் திருப்பிப் படிப்பதில் எனக்கே உத்சாகம் கிடையாது. அத்தனை சுவையுள்ள விஷயங்கள் அதில் ஒன்றுமில்லை. "இன்று மத்தியான்னம் சாப்பிட்டுவிட்டு 5 மணி வரையில் தூங்கினேன். இன்று கம்ப ராமாயணம் படிக்கலாமென்று நினைத்தேன், ஆனால் முடியவில்லை— இன்று சினிமாவுக்குப் போனேன்"—இந்த மாதிரி குறிப்புக்கள்தான் அனேகமாக எந்தப் பக்கத்தில் பார்த்தாலும் இருக்கும். இவற்றைப் படிப்பதில் எழுதியவனுக்கே சலிப்புத் தட்டுவதில் என்ன ஆச்சரியமிருக்கிறது? ஆனால், 1944-ஆம் ஆண்டில் ஒரு மூன்று, நான்கு மாதங்களுக்கு எனது நாட்குறிப்பில் ஒரு முக்கிய விஷயம் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. அது எல்லோருடைய உள்ளத்தையும் கவரும் என்ற நம்பிக்கையால்தான் அதை அப்படியே, சில்லறை விஷயங்களை ஒதுக்கி விட்டு, இங்கு தருகிறேன்.

அது என் நண்பன் குமரேசனைப் பற்றியது. அவன் எப்பொழுதும் கனவுலகத்தில் இருப்பவன். உலகம் இப்படி மாற வேண்டும், அப்படி மாற வேண்டும் என்று வானளாவிய திட்டங்கள் வகுப்பவன் ; ஆகாயக் கோட்டை கட்டுபவன் ; அதே சமயத்தில் சிறந்த விஞ்ஞான அறிவும் படைத்தவன் ; தத்துவக் கலைஞனுங்கூட.

நண்பர்கள் கோஷ்டியிலே அவனை எல்லோரும் 'கிறுக்கன்' என்று கேலி பண்ணுவார்கள். அதை அவன் பொருட்படுத்தவே மாட்டான். "உலகத்தில் தோன்றிய ஒவ்வொரு மகானையும் கிறுக்கன் என்றுதான் முதலில் உலகம் நினைத்தது" என்று சொல்லி அர்த்த புஷ்டியோடு நிறுத்தி விடுவான்.

எல்லோரும் அவனைக் கேலி செய்தாலும் எனக்கு மட்டும் என்னை அறியாது அவன்மேல் ஒரு வாஞ்சை யுண்டாகி வளர்ந்து வந்தது. ஆதலினாலேதான் அவன் தனது ஆராய்ச்சிகளையும், கனவுகளையும் என்னுடன் தாராளமாகச் சொல்லுவான் ; நானும் கேட்பேன்.

இச்சிறு முகவுரையோடு நான் எனது நண்பனைப் பற்றி நாட்குறிப்பில் எழுதி வைத்திருப்பதை இங்கு தருகின்றேன் :

1-3-44 காலை பத்து மணி இருக்கும் ; குமரேசன் வந்தான்.

" இப்பொழுது தோன்றியிருக்கிற இந்தப் பயங்கர யுத்தம் மக்களுக்குச் சொல்ல முடியாத துன்பத்தைத் தந்தாலும் உலகத்திற்கு ஒரு பெரிய நன்மையாக

முடியப் போகின்றது" என்றான். இது அவனுடைய உறுதியான நம்பிக்கை. இந்த நம்பிக்கையின் பேரில் தான் அவன் தனது ஆராய்ச்சியைச் செய்து வந்தான்.

"யுத்தமாவது நன்மையாக முடிவதாவது? போன மகா யுத்தம் சாதித்தது போலத்தான்" என்று வழக்கம் போல் இன்றும் ஆரம்ப கீதம் பாடி வைத்தேன்.

அவன் உடனே தொடங்கிவிட்டான்: "அப்படி நீ நினைக்கவே படாது. போன யுத்தம் ஒரு நன்மையும் உண்டாக்கவில்லை என்று சொல்வதெல்லாம் முற்றிலும் உண்மையல்ல. எதிர்பார்த்த அளவு நன்மையைக் கொடுக்கவில்லை, அவ்வளவுதான். மேலும் அந்த யுத்தம் முடிந்த பிறகு செய்த தவறுகளையெல்லாம் இன்று மக்கள் அறிந்து கொண்டார்களே."

"ஆமாம்; மறுபடியும் அதே தவறுகளைச் செய்ய மாட்டார்களென்று எப்படிச் சொல்ல முடியும்?"

"இப்பொழுது படுகிற கஷ்டமே மறுபடியும் அவற்றைச் செய்ய விடாது. மனிதன் தவறு செய்கிறான்; வாஸ்தவந்தான்; ஆனால், அதிலிருந்து பாடமுங் கற்றுக்கொண்டு முன்னேறுகிறான். இதில் எனக்குப் பரிபூர்ண நம்பிக்கை இருக்கின்றது."

"சரி, இந்த யுத்தத்தின் முடிவு என்னதான் ஆகுமென்கிறாய்?"

"இந்த யுத்தத்திற்குப் பிறகு உலகத்திலுள்ள மக்களெல்லோரும் தாங்கள் ஒரு பெரிய அழகிய இன்பக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை உணர்வார்கள். அடிமை யென்று ஒரு ஜாதியும் இருக்காது. எல்லோரும்

சகோதரர் என்றால் அடிமை யேது? எல்லோருக்கும் சமமாக உணவு, உடை, படிப்பு, சுதந்திரம் எல்லாம் இருக்கும். ஆப்பிரிக்க நீக்கிரோவும், ஐரோப்பிய வெள்ளையனும் தோள்மேல் தோள் போட்டுக்கொண்டு இன்பத்தை நாடிச் செல்லும் காலம் நெருங்கிவிட்டது."

இப்படிச் சொல்லும்போதே அவன் கண்கள் பிரகாசித்தன. முகம் மலர்ந்தது. அவன் ஏதோ முன்னால் தோன்றும் ஒரு கந்தர்வ உலகத்தைப் பார்த்துக் கொண்டு பேசுவதுபோல் காணப்பட்டான். அவனுடைய ஆர்வத்தில் என் உள்ளம் கவரப்பட்டாலும், என் உதட்டில் ஒரு சிரிப்புத்தான் தோன்றியது.

"சரி, அதிருக்கட்டும், உன்னுடைய விஞ்ஞான ஆராய்ச்சியெல்லாம் எவ்வளவு தூரத்திலிருக்கிறது?" என்றேன்.

இப்படித் திடீரென்று பேச்சை மாற்றியது அவனுக்குக் கஷ்டமாகத் தோன்றியது. அவனால் உடனே மனத்தை முதல் விஷயத்திலிருந்து திருப்ப முடியவில்லை. கொஞ்ச நேரம் எதைப்பற்றியோ மௌனமாகச் சிந்தனை செய்து கொண்டிருந்தான்.

விஞ்ஞான ஆராய்ச்சியும் அவனுக்கு ஒரு பைத்தியமாகையால் பிறகு அதைப் பற்றியும் ஆரம்பித்து விட்டான்.

"நான்காவது பரிமாணம் ஒன்று உண்டென்பது தெரியுமா? அதுதான் காலம்."

"அது கிடக்கிறது—என்னமோ எதிர் காலத்திற்குள்ளே போகக் கூடிய யந்திரம் உண்டாக்கிக் கொண்டிருந்தாயே, அது என்ன ஆச்சு?"

" அதைப்பற்றித் தான் சொல்லப் போகிறேன். அதற்கு முதலில் காலத்தைப்பற்றித் தெரிந்து கொள்ள வேணும்."

இந்த இடத்தில் பேச்சுத் தடைப்பட்டது. மற்ற நண்பர்கள் வந்து விட்டார்கள்.

எல்லோரும் உலாவப் புறப்பட்டோம்.

5-3-44 : நாள் முழுவதும் படுத்துக் கொண்டேயிருந்தேன். பட்டணம் போய் வந்த அலுப்பு. அப்பா, இந்த ரயில் பிரயாணத்தை நினைத்தால் பயமாக இருக்கிறது.

மாலையில் குமரேசன் வந்தான். படுத்துக்கொண்டே எதையாவது பேச வேண்டுமென்று இஷ்டமா யிருந்தது எனக்கு. அன்று விட்டுப்போன பேச்சை ஆரம்பித்தேன்.

" ஆமாம், உன்னுடைய யந்திரத்தைப் பற்றிச் சொல்லுகிறேனென்ருயே ?—அது என்ன யந்திரம் ?"

" அதுதான் கால யந்திரம். இறந்த காலத்திலும், எதிர் காலத்திலும் செல்லக் கூடியது."

" அதெப்படிப் போக முடியும் ? இறந்த காலத்திற்குள்ளே இப்பொழுது போகமுடியுமா ?"

" போக முடியுமென்றுதான் நான் நம்புகிறேன். நீளத்திலும், அகலத்திலும், உயரத்திலும் போகிருேமோ இல்லேயோ—அது போலத்தான் இதிலும்."

" அவற்றிற்கும் இதற்குமென்ன சம்பந்தம் ? அவற்றில் போக முடிந்தால் காலத்திலும் போக முடியுமென்று எப்படிச் சொல்வது ? பூமிக்கு மேலே ஒரு

விமானத்தில் பறந்து போகலாம் என்றால், பூமிக்குள்ளும் பறந்து போகலாம் என்று சொல்வதைப் போலல்லவா இருக்கிறது உனது பேச்சு ?"

"இல்லை ; அப்படியல்ல. காலம் என்பதும் நீள, அகல, உயரங்களைப் போலவே ஒரு பிரமாணம். இந்த நான்குக்கும் உட்பட்டனவே இந்த அண்டங்களெல்லாம்."

"சரி, அப்படியே வைத்துக் கொள். அப்படியே யானாலும் காலத்தில் பிரயாணம் செய்ய முடியுமென்று எப்படிக் கூற முடியும் ?"

"மற்ற பரிமாணங்களில் போகும் போது காலத்தில் மட்டும் ஏன் முடியாது ?"

"அதெப்படி முடியும்? என்றால் அதை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லையே ?"

"ஏன், இப்பொழுதுகூட நாம் காலத்தில் பிரயாணம் செய்துகொண்டு தானிருக்கிறோம். ஆனால், இப்பொழுது இந்தப் பிரயாணம் நமது இச்சைப்படி நடப்பதில்லை. நாம் விரும்புவதெல்லாம் நமது இச்சைப் படி எதிர் காலத்திலோ, இறந்த காலத்திலோ எந்தப் பகுதிக்கு வேண்டுமானாலும் போகவேண்டு மென்பதே."

"அது முடியுமென்று தோன்றவில்லை."

"உயரத்தில் ஆகாயத்தில் பறக்க முடியுமென்று எழுபதாண்டுகளுக்கு முன் யாராவது நினைத்தார்களா ? அப்படி நினைத்தவர்களைக்கூட எல்லோரும் பயித்தியக் காரர்கள் என்று சொன்னார்கள். ஆனால், இன்று அது

சர்வ சாதாரணமாகப் போய்விடவில்லையா ? அதைப் போலத்தான் இதுவும் ஆகப் போகிறது."

எனக்கு ஒன்றும் புரியவில்லை. வீணாக மூளையைக் குழப்பிக்கொள்ள வேண்டாமென்று பேச்சை அப்படியே விட்டுவிட்டேன்.

8-3-44: சென்ற இரண்டு நாட்களாகக் குமரேசனைச் சந்திக்க முடியவில்லை. ஆனால், அவன் சொன்ன விஷயம் என் மண்டைக்குள் புகுந்து அங்கு வேலை செய்து கொண்டே இருந்தது. என்னால் அதை மறக்க முடியவில்லை. ஆனால், காலத்தில் பிரயாணம் செய்வ தென்பது பயித்தியக்கார எண்ணம் என்பது மட்டும் நிச்சயமாகப்பட்டது. இருந்தாலும் அவனைப் போய்ப் பார்த்து அதுபற்றி மேலும் பேசலாம் என்ற ஆசை உண்டாயிற்று.

அவன் வீட்டுக்குப் போனேன். இரண்டு நாட்களாக என்னவோ சோதனை செய்து கொண்டிருந் தானாம். தனது அறையை விட்டு வெளிக் கிளம்பவே இல்லையாம்.

நல்ல வேளை. அவன் பெற்றோர்கள் அவன் இஷ்டப் படியே விட்டுவிடுகிறார்கள். அவனுக்கு வேண்டிய பணமும் கொடுத்து விடுகிறார்கள். பணம் இருக்கிறது. உத்யோகம் பண்ணவேண்டுமென்ற கவலையே இல்லை.

குமரேசன் ஆழ்ந்த யோசனையிலிருந்தான். என்னை முதலில் அவன் கவனிக்கவில்லை. பிறகு திடீரென்று என்னை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டு, "திரிகால ஞானிகளைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாயா ?" என்றான்.

நான் பதில் சொல்லுமுன்பே அவன், "நமது தேசத்தில் பல ஞானிகள் இருந்திருக்கிறார்கள்; அவர்கள் இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் ஆகிய மூன்றிலும் நடக்கும் விஷயங்களை உணர்ந்து சொல்வார்கள்."

"ஆமாம், அதற்கென்ன இப்போ?"

"அவர்கள் முக்காலங்களிலும் நடக்கும் விஷயங்களை மனத்தால் அறிந்துதானே சொன்னார்கள்?" என்று கேட்டுவிட்டுச் சிந்தனையில் மூழ்கி விட்டான்.

நான் நினைத்து வந்த விஷயத்தைப்பற்றிப் பேச முடியவில்லை. அது சமயம் அவனைத் தொந்தரவு செய்வது சரியல்லவென்று திரும்பிவிட்டேன்.

9-3-44: இன்று குமரேசன் வந்தான். "ஏன் நேற்றுத் திடீரென்று மறைந்துவிட்டாய்?" என்று கேட்டான்.

"அதிருக்கட்டும்; நீ என்னவோ யோசனை பண்ணிக் கொண்டிருந்தாயே, கடைசியில் என்ன முடிவுக்கு வந்தாய்?"

"தத்துவ சாஸ்திரத்தில் இருந்த விஷயங்களில் பல இன்று விஞ்ஞான சாஸ்திரத்தில் பிரத்தியக்ஷமாகப் பரிசோதனை செய்து காண்பிக்கும் உண்மைகளாக மாறி விட்டன. அம்மாதிரியே இந்தத் திரிகாலம் உணரும் தத்துவமும் ஆகவேண்டும். யாரும் அதை யந்திரத்தின் உதவியால் அறியும்படி செய்ய வேண்டும். அதற்கான ஒரு யந்திரம் தயாரித்துக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

இந்தச் சமயத்தில் என் தகப்பனுர் உள்ளே நுழைந்தார். என் கல்யாண விஷயமாக ஜாதகம் பார்த்துவிட்டு வந்திருக்கிறுர். "இந்த ஜாதகம் சரியில்லையடா" என்று வாயைச் சப்பினுர்.

"ஜாதகத்தில் என்ன சரியில்லாது போய்விடும்? பெண்ணுக்கும், பிள்ளைக்கும் சம்மதமானுல் கலியாணம் பண்ண வேண்டியதுதானே?" என்றுன் குமரேசன்.

"அப்படியா? சே; ஜாதகத்தைப் பார்த்தால் பெண்ணின் வருங்காலமெல்லாம் தெரியுமல்லவா? அது நன்ருக இருந்தால்தானே அந்தப் பெண்ணை ஏற்பாடு செய்யலாம்?" என்ருர் தந்தை.

"ஒருவனுடைய எதிர் காலத்தைப் பார்க்க முடியுமா?" என்றுன் குமரேசன் ஆவலோடு.

"ஏன் முடியாது? அப்போ சோதிடமே பொய்யா?" என்ருர் என் தகப்பனுர்.

"ஓகோ, இந்தச் சோதிட சாஸ்திரம் எதிர் காலத்தைப்பற்றிச் சொல்லுகிறதல்லவா? இதையும் எனது ஆராய்ச்சியில் சேர்த்தால் பயன்படுமா?" என்று கூறிக்கொண்டே குமரேசன் வெறு வெளியைப்பார்த்துக் கொண்டு கிளம்பிவிட்டான்.

"இவன் யாரடா, மகாக் கிறுக்கன் போலிருக்கிருன்?" என்று தகப்பனுர் கூறிச் சிரித்தார்.

18-4-44 : குமரேசனைப் பார்த்துப் பல நாட்களாகி விட்டன. ஏனே அவன் வருவதேயில்லை என்று அவன் வீட்டிற்குப் போனேன். அவன் பாலக்காட்டில்

உள்ள ஒரு பிரபல ஜோஸ்யனிடம் போயிருப்பதாகவும், நாளைக்குத் திரும்புவான் என்றும் வீட்டில் சொன்னார்கள்.

22-3-44: குமரேசன் வந்தான். "எங்கே, சோதிடம் கற்றுக் கொள்ளப் போயிருந்தாயா? இனிமேல் ஜாதகம் பார்க்க வேறு பக்கம் போக வேண்டியதில்லை" என்று பரிகாசம் செய்தேன்.

"சோதிடம் நல்ல சாஸ்திரந்தான்; ஆனால், அதை வளர்ச்சி செய்யத்தான் இப்பொழுது வல்லவர்கள் யாருமில்லை. நமது முன்னோர்கள் அற்புதமான ஒரு சாஸ்திரம் உண்டாக்கி யிருக்கிறார்கள். அதைத் தொடர்ந்து அபிவிருத்தி செய்ய வேண்டும்."

"ஆமாம், இதிலே ஏன் திடீரென்று நுழைந்து விட்டாய்?"

"சோதிடம் நடந்தவற்றையும், வரப்போகிறதையும் கூறுகிறதல்லவா? அது என் ஆராய்ச்சிக்கு எவ்வளவு தூரம் உதவியா யிருக்குமென்று தெரிந்து கொள்ள விரும்பினேன். எனது யந்திரத்திற்கு இதில் ஏதாவது யோசனை கிடைத்தாலும் கிடைக்கலாம்."

"ஜோஸ்யத்திற்கும், யந்திரத்திற்கும் என்ன சம்மந்தம்?"

"நான் சம்மந்தம் உண்டாக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். எதிர்காலத்தை ஒரு யந்திரமூலம் காண முடியுமானால் அது சிறிதும் பிழையில்லாமலிருக்கும்—அதைத்தான் நான் செய்யப் பேகிறேன்.

எனது யந்திரம் மிக நுண்மை வாய்ந்தது, எண்ண அலைகளைக் கொண்டு இயங்குவது.”

“ஓகோ, அந்த யந்திரத்தை வைத்துக் கொண்டு, யுத்தம் முடிந்த பத்து வருஷங்களில் வரப் போவதாகச் சொல்லுகிறாயே—அந்த அற்புத உலகத்தைப் பார்க்கப் போகிறாயாக்கும்?”

“ஏன் பார்க்கக்கூடாது? பார்க்கத்தான் போகிறேன். அந்த அற்புத உலகம் தோன்றுவது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயமாக எனது காலயந்திரமும் வரப்போகிறது” என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

27-3-44: குமரேசன் ஊரிலில்லை. ஏதோ சில யந்திர சாமான்கள் வாங்கப் பட்டணம் போயிருக்கிறான்.

1-4-44: பட்டணத்திலிருந்து குமரேசன் கடிதம் எழுதி யிருக்கிறான். சாமான்களையெல்லாம் வாங்கிக் கொண்டு புதுச்சேரிக்குப் போனானாம். “இங்கே ஒரு அற்புத மனிதரைச் சந்தித்தேன். இது வரை வெளி வராத சில சித்த நூல்கள் ஏட்டுப் பிரதியாக அவரிடம் இருக்கின்றன. அவற்றில் பல ஆச்சரியமான விஷயங்கள் அடங்கி யிருக்கின்றன” என்று எழுதியிருக்கிறான்.

9-4-44: குமரேசன் திரும்பி விட்டான். இருவரும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

உலகின் சுகத்திற்கான பல விஷயங்கள் சித்த நூல்களில் இருப்பதாகச் சொன்னான். “இன்று சித்த நூல் என்று வழங்குபவை யெல்லாம் சித்தர்களால் எழுதப் பட்டவையல்ல. அவர்கள் சொன்னதைக் கேட்டுப்

பின் நினைவுக்கு வந்ததை எழுதி வைத்திருக்கிறார்கள் சில வற்றில். சில யாராலேயோ எழுதப் பட்டவை. அவைகளில் உண்மையைக் கண்டு பிடிப்பது சுலபமல்ல. ஆனால், பொறுமையோடு அவற்றை ஆராய்ந்தால் உலகின் நன்மைக்கு வேண்டிய நல்ல பலன் கிடைக்கும்; அரிய உண்மைகள் இடையிடையே மறைந்து கிடக் கின்றன" என்றான்.

"என்ன உண்மையோ?"

"காயகற்பம் செய்து பல நூறு வருஷங்கள் வாழ லாம்; நினைத்த இடத்திற்கு நினைத்த மாத்திரத்தில் போகலாம்—"

"சரி சரி; முதலில் நீ உனது ஆராய்ச்சியை முடி. பிறகு அட்டமாசித்தியைப் பற்றி யோசிக்கலாம்."

"நான் எனது ஆராய்ச்சிக்கு உதவியாகத்தான் இவற்றையெல்லாம் தேடிக் கொண்டிருக்கிறேன். காரணமில்லாமல் வெவ்வேறு துறையில் இறங்க எனக்கென்ன பயித்தியமா பிடித்திருக்கிறது?"

"நான் ஒருவன்தான் அப்படிச் சொல்லாம லிருப்பது—பாக்கி."

22-4-44: பல நாட்களாகக் கும்ரேசனைக் காணோம். நண்பர்களிடம் விசாரித்தேன். "அவன்தான் சந்நியாசி யாகி விட்டானே, உனக்குத் தெரியாதா?" என்றார்கள்.

தீர விசாரித்ததில் அவன் பொதிய மலைச் சாரலில் தவஞ்செய்து கொண்டிருக்கும் சித்தர்களைத் தேடிப் போயிருப்பதாகத் தெரிந்தது.

15-5-44 : குமரேசன் கடிதம் எழுதியிருக்கிறான். விலாசம் ஒன்றும் தரவில்லை. சித்தர்களைப் பார்த்த விபரமும் காணோம். நாடி சாஸ்திரம் அடங்கிய பழைய ஏடுகள் எங்கோ இருக்கின்றனவாம். அவற்றைப் பார்த்துவிட்டு ஊர் திரும்புவதாக எழுதியிருக்கிறான்.

19-5-44 : குமரேசன் திரும்பி விட்டானென்று தெரிந்து அவனைப் பார்க்கப் போனேன். வீட்டில் தானிருந்தான். ஆனால், சந்தித்துப் பேச முடியவில்லை.

திரும்பி வந்ததிலிருந்து யாரிடமும் பேசுவதில்லையாம். ஏதோ மூலிகைகள் கொண்டு வந்திருக்கிறானாம். யந்திரத்தை மாற்றியமைக்கிறானாம். என்னென்னவோ செய்கிறானாம். உணவருந்தக்கூட மற்றவர்களுடன் கலந்து கொள்வதில்லை. தனது அறையிலேயே கொண்டுவந்து வைக்கும்படி ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறான்.

அவன் தாயாருக்கு இப்பொழுது அவனைப்பற்றிக் கவலை ஏற்பட்டிருக்கிறது. "ஒரு கலியாணத்தைப் பண்ணி வைத்து விட்டால் பேசாமல் வீட்டைக் காத்துக் கொண்டு கிடப்பான்" என்று தனது—அபிப்பிராயத்தை என்னிடம் வெளியிட்டாள். தகப்பனார் பெரிய வக்கீல். அவருக்கு ஓய்வென்பதே கிடைக்காது இதையெல்லாம் கவனிக்க. மேலும் பையன் சிறந்த ஆராய்ச்சிக்காரனாக வேண்டும் என்பது அவர் ஆசை.

23-5-44 : இன்று குமரேசனிடம் பேச முடிந்தது. மிகவும் மெலிந்திருந்தான். தூக்கமில்லாமல் கண்கள் அழுத்துப் பிரகாசமற்றிருந்தன.

"சித்தர்கள் நினைத்த இடத்திற்கு நினைத்த மாத்திரத்தில் செல்லுகிறார்கள். இது சாத்தியந்தான். ஏனெனில், இது காலத்தின் போக்கை அனுசரித்தே நடக்கிறது ஆனால் நான் மட்டும் எதிர் காலத்திற்குள் 10 வருஷம் முன்னே சென்றுவிட்டால் உலகம் என்னுடன் வருமா?

"அப்பா, இதைக் கண்டு பிடிக்கவா இத்தனை நாள் உடம்பைக் கெடுத்துக் கொண்டு வேலை செய்தாய்? எதிர் காலத்திற்குள் போக முடியாது என்பதுதான் தெரிந்த விஷயமாச்சே."

"நான் போக முடியாதென்று எப்பொழுது சொன்னேன்?" என்று என்மீது சீறினான். கொஞ்ச நேரம் நெற்றியில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். பிறகு வெள்ளிப் பாத்திரத்தில் வைத்திருந்த இளநீரைச் சிறிது சுவைத்துக் கொண்டான்.

இளநீர் இல்லாவிட்டால் மூளை கொதிக்கிறதாம்.

பிறகு சற்று அமைதியாகப் பேசினான். "இந்த உடலோடு காலத்தில் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியமில்லை. உள்ளம் அதில் சென்று நடந்ததையும், நடக்கப் போவதையும் பார்க்க முடியும். இதுவரை எல்லாம் அனுமானமாக நடந்தது. விஞ்ஞான முறையில் யந்திரத்தின் உதவியாலே யாதொரு தவறும் நேராதபடி காலத்தில் இனிமேல் பிரயாணம் செய்யலாம். சென்று மறைந்த உண்மையையும், வரப் போவதையும் அப்படியே காணலாம். எனது யந்திரம் அதற்கு உதவி செய்யும்."

நான் சித்தர்களைப்பற்றி யெல்லாம் கேட்கலா மென்றிருந்தேன். ஆனால், அவன் அதற்கு மேல் வாய் திறக்க மறுத்துவிட்டான்.

30-5-44 : குமரேசன் வெளியில் வருவதே இல்லை. தனது புதிய யந்திரத்தை அபிவிருத்தி செய்வதிலேயே முனைந்திருக்கிறான். உணவுகூடச் சரியாகச் சாப்பிடுவ தில்லை என்று அவன் தாயார் அங்கலாய்க்கிறாள்.

6-6-44 : குமரேசன் திடீரென்று எங்கள் கூட்டத் தில் தோன்றினான். ஒரே தாடியும் மீசையும். உடம்பு என்று ஒன்று இருப்பதாகவே இப்பொழுது அவனுக்கு ஞாபகம் இல்லை போலிருக்கிறது.

"யுத்தம் முடிந்தவுடன்தான் சமத்துவம் வரப் போகிறதே, இப்பொழுது எதற்காகப் பணம் பணம் என்று அலைகிறாய்?" என்று ஒரு நண்பனைப் பார்த்து மற்றவர்கள் இடித்துச் சொன்னார்கள்.

"சமத்துவம் வருமென்று என்ன நிச்சயம்?"

"இதோ குமரேசனே இருக்கிறான். அவனைக் கேள்" என்று எல்லோரும் அவன் பக்கம் திரும்பி னார்கள். இதற்காகத்தான் பேச்சே தொடங்கியது.

அவன் ஆரம்பித்து விட்டான். "சமத்துவம் சகோதரத்வம் எல்லாம் வரப்போகிறது. சந்தேகமே இல்லை. இந்த யுத்தம் நமது நன்மைக்காகவே தோன்றி யிருக்கிறது. யுத்தத்தை மனிதர்கள் சாவதிலிருந்தும், தேசங்கள் பிடிபடுவதிலிருந்தும் நோக்கக் கூடாது. அது தவறான பார்வை. காலத்தால் சாவதும், தேசங்கள் கைமாறுவதும் சகஜம். ஆனால், யுத்தத்தை

முன்னேற்ற அதிர்ச்சி அல்லது வேகம் என்று நோக்க வேண்டும். நமது அறிவால் கண்ட உண்மைகளைப் பின்பற்ற நாம் தயங்கிவிட்டோம். சில சுயநலக்காரர்களின் சூழ்ச்சியாலும், நமது அசிரத்தையாலும் முன்னேற்றம் பின் தங்கியது. அதற்கு ஒரு வேகங் கொடுக்க வந்ததே யுத்தம். ஆகையினால் யுத்தத்தினால் முடிவாக நன்மையே விளையப் போகிறது. அதில் இன்னும் உங்களுக்கு ஏதாவது சந்தேகமிருக்குமானால் நாளைக் காலை என் வீட்டிற்கு வாருங்கள். எனது யந்திரத்தின் மூலமே அதை உங்களுக்கு நிதரிசனமாகக் காட்டுகிறேன்.''

சிலர் சிரித்தார்கள்; ஒருவன் தன் தலையை விரலால் குறிப்பாகத் தட்டிக் காண்பித்தான். நான் மௌனம் சாதித்தேன்.

*7-6-44* : குமரேசன் வீட்டிற்கு ஆவலோடு போனேன். வேறு நண்பர்கள் யாரும் வரவில்லை. அவன் வார்த்தையை யாரும் பொருட்படுத்தவில்லை போலிருக்கிறது.

குமரேசன் என்னுடன் சில வார்த்தைகளே பேசினான். தமது யந்திரத்தைப் பார்ப்பதும் சிரிப்பதுமாக இருந்தான். "இந்த யந்திரத்தின் உதவியால் எதிர்காலத்தைப் பார்க்க ஆசையிருந்தால் தினமும் இங்கே வா. என்றைக்குக் காட்டுவேன் என்று இப்பொழுது சொல்ல மாட்டேன். நானே இன்னும் பார்க்கவில்லை. நான் பார்த்த பிறகுதான் உனக்கு.''

*13-6-44* : தினமும் குமரேசன் வீட்டுக்குப் போகிறேன். ஆனால், அவன் என்னுடன் பேசுவதே

இல்லை. அந்த யந்திரத்திலேயே சதா கவனம். இடையிடையே ஆழ்ந்த யோசனையில் மெய்மறந்து விடுகிறான்.

21-6-44: இன்று குமரேசன் ஆராய்ச்சியெல்லாம் முடிந்துவிட்டது. திடீரென்று இப்படி முடியுமென்று நான் நினைக்கவே இல்லை. "யந்திரம் தயாராகிவிட்டது. இப்பொழுது முதலில் நான் எதிர் கால உலகத்தைப் பார்க்கப் போகிறேன். பிறகு நீ பார்க்கலாம்" என்று சொல்லிவிட்டுக் குமரேசன் தனது யந்திரத்திற்குள் நுழைந்தான். அது ஐந்தடி உயரமிருக்கும்.

சிறிது நேரத்தில் ஸ்ஸ்...ஸ்...என்ற ஓசை பிறந்தது. பல வகையான வர்ணக்கதிர்கள் தோன்றிச் சுற்றிலும் பிரகாசித்தன. மின்சார விசிறி ஓடுவதுபோல் ஒரு சப்தமும் உண்டாயிற்று.

இப்படி ஒரு பத்துப் பதினைந்து நிமிஷம் சென்றிருக்கும். திடீரென்று ஏதோ ஒரு அதிர்ச்சி உண்டானது போல் எனக்குப் பட்டது. குமரேசன் வாய்விட்டு உரக்கக் கத்தினான். "ஆ இதுவா வரப் போகிற உலகம்! அணுக்குண்டுப் பிரளயந்தானா?"

அவ்வளவுதான். யந்திரம் நின்று விட்டது. குமரேசன் மூர்ச்சை போட்டு விழுந்து கிடந்தான்.

30-6-44: குமரேசனுக்கு மூளை குழம்பிவிட்டது. அவனைப் பார்க்க வருகிறவர்களிடமெல்லாம் எதிர்கால உலகத்தைப்பற்றி என்னென்னவோ பிதற்றிக் கொண்டிருக்கிறான். இனி அவனுடைய நோய் தீராது என்று வைத்தியர்கள் கைவிட்டு விட்டார்கள்.

# வித்தியாசம்

கமலநாதனுடைய வாழ்வெல்லாம் போய்விட்டது. அவனுடைய ரேடியோ மாடல் பங்களா, ஷெவர்லீ மோட்டார் கார், கோச்சு வண்டி எல்லாம் கடன் காரர்கள் வசமாகிவிட்டன. சமையலுக்கு இரண்டு ஆள், பூந்தோட்டம் பார்க்க ஒரு ஆள், பூட்ஸ் துடைக்க வேறொருவன்—இப்படியிருந்த ஆட்களெல்லாம் வேறிடங்களில் வேலை பார்த்துக் கொண்டார்கள். இப்பொழுது அவன் பாதசாரியாகத் தெருவில் நடந்து கொண்டிருக்கிறான். அந்தத் தெருவிலே அவன் வந்ததே கிடையாது. ஒருவேளை வந்திருந்தாலும் காரில் தான் வந்திருக்கலாம். அவனுடைய பாதம் அந்த மண்ணில் பட்டதில்லை. ஆனால், அந்தக் காலம் மலையேறிவிட்டது. இனி அவன் எங்கு சென்றாலும் கால் நடையாகத்தான் செல்லவேண்டும்.

அவனுடைய தோற்றத்தையும் உடையையும் கண்டு பலர் ஆச்சரியத்தோடு உற்றுப் பார்க்கிறார்கள்.

யாரும் அவனை அடையாளம் கண்டுகொள்ளவில்லை என்றாலும் அவனை ஒரு தனவந்தன் என்றுதான் மதிக்கிறார்கள். ஒரு பணக்காரன் தன்னந்தனியனாக நடந்து போகக் காரணமென்ன வென்று அவர்களுக்கு ஆச்சரியம். அவன் சொத்தையெல்லாம் இழந்து விட்டான் என்பதையும், அந்தத் தோற்றமும், உடையுமே மீதி என்பதையும் அவர்கள் அறிவார்களா?

கமலநாதனுக்கு அவர்களுடைய ஆச்சரியம் விளங்காமலில்லை. இருந்தாலும் அவன் என்ன செய்ய முடியும்? யாருடைய பார்வைக்கும் அகப்படாமல் செல்ல வேண்டுமென்று அவன் வேகமாக நடந்தான். ஆனால், மனச் சோர்வினால் சீக்கிரம் களைப்பு ஏற்பட்டது. வீதியின் கோடியிலே ஒரு முச்சந்தி உண்டு. அந்த இடத்திலே நகரபரிபாலன சபையார் ஒரு சிறு பூங்கா ஏற்படுத்தியிருந்தார்கள். அங்கே கிடந்த ஒரு பெஞ்சியில் கமலநாதன் அமர்ந்து யோசனை செய்யலானான்.

அந்திச் சூரியன் வெகு அழகாக வான விளிம்பைத் தொட்டுக் கொண்டிருந்தான். காவி நிறமான மகரந்தத் தூள் எங்கும் படர்ந்ததுபோல மேல்வானம் காட்சியளித்தது. வெண் மேகமெல்லாம் அந்தச் செங் குழம்பிலே தோய்ந்து சிவப்பேறிவிட்டன. ஆதலால் அவற்றைத் தழுவிப் பிரதிபலித்துவரும் பொற்கிரணங்களும் உலகத்திற்குப் புதியதொரு மோகனச் சோபையைக் கொடுத்தன. பூங்காவிலுள்ள சிறு மரங்களில் பறவைகள் அரட்டையடித்துக் கொண்டிருந்தன.

கமலநாதனுடைய கண்களில் இவையெல்லாம் படவில்லை. அவனுக்கு எல்லாம் இருண்டு தோன்றிற்று.

அவன் தைரியமாகப் பெரிய பெரிய வியாபாரம் செய்தான். அதிருஷ்டம் அவன் பக்கம் இருக்கும் வரையில் எதிர்பார்த்ததற்கும் மேலே லாபம் கிடைத்து வந்தது. பணம் குவிந்தது. அதைக்கொண்டு பங்களாக் கட்டினுன், மோட்டார் வாங்கினுன். பல வேலையாட்களை நியமித்தான். தடபுடலாக வாழ்க்கை நடத்திவந்தான். ஆனுன், திடீரென்று எல்லாம் போய்விட்டது. கடைசியாகச் செய்த பஞ்சு வியாபாரத்தில் பெரிய நஷ்டம் உண்டாயிற்று. சொத்து சுகமெல்லாம் மாயமாக மறைந்துவிட்டன. பாங்கியில் ஒரு சல்லியில்லை. தனது சட்டைப் பையில் அப்பொழுதிருந்த ரூபாய் நோட்டு ஒன்றுதான் பாக்கி. அது எத்தனை நாளைக்கு வரப்போகிறது ? அதை வைத்துக்கொண்டு என்ன செய்ய முடியும் ? அவன் மெதுவாகப் பணப் பையை எடுத்து ஒருதரம் பார்த்தான். ஆமாம், அந்த நோட்டு பத்திரமாக உள்ளேயிருந்தது. இருந்து என்ன செய்வது ? வியாபாரம் செய்ய அது போதுமா ? நான்கு நாள் செலவிற்குக்கூட அது போதாது. கமலநாதனுக்குத் தன்னை அறியாமலே சிரிப்பு வந்தது. சிரித்துக்கொண்டே அவன் சுற்றிலும் பார்த்தான்.

அந்தச் சமயத்தில் வேருெரு மனிதன் அவன் அமர்ந்திருந்த பெஞ்சியின் மறு கோடியில் வந்து உட்கார்ந்தான். அவனுக்குச் சுமார் 45 வயதிருக்கலாம். கமலநாதனுக்கும் அதே வயதுதான். ஆனுல், அவனுடைய உடை தோற்றம் முதலியவற்ருல் அவன் ஏழை என்று சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். ஏன் ? அவன் ஒரு ஏழை ஆரம்பப் பள்ளிக்கூட

வாத்தியார் என்றே தெரிந்துகொள்ளலாம். வாத்தியார் சாயல் அவன் உருவத்தில் தெளிவாகப் பதிந்திருந்தது.

ஆனால், அவன் முகம் இப்பொழுது மலர்ந்திருக்கிறது. தலை சற்று நிமிர்ந்திருக்கிறது. வில்லுப் போன்ற முதுகுக் கூனல் கொஞ்சம் நேராகியிருக்கிறது. அவன் கண்களிலே என்றுமில்லாத ஒரு புதிய நம்பிக்கையின் ஒளி சுடர் விடுகின்றது. அவற்றிற்கெல்லாம் காரணம் இல்லாமலில்லை.

அவன் பெயர் முருகேசன் ; முருகேச வாத்தியான். இருபத்தைந்து வருஷங்களாக ஜில்லா போர்டு ஆரம்பப் பாடசாலையில் வேலை பார்த்திருக்கிறான். கோயமுத்தூர் ஜில்லாவில் அவன் கால் படாத தாலுக்காவே கிடையாது. ஒவ்வொரு தாலுக்காவிலும் அவன் பாடம் சொல்லிக் கொடுத்திருக்கிறான். அவனுடைய சோகம் படிந்த குரல் எங்கும் கேட்க வேண்டுமென்று நினைத்தோ என்னவோ அவனுக்கு வெவ்வேறு இடங்களுக்கு மாற்றம் கிடைத்துக்கொண்டே இருக்கும். முருகேசனுக்கு வாத்தியார் வேலை கொஞ்சமும் பிடிக்கவில்லை. எப்படியாவது அதைவிட்டுத் தொலைக்க வேண்டுமென்று ஆசை கொண்டிருந்தான். ஆனால், எப்படித் தொலைப்பது ? தைரியமாக ஆரம்பத்திலேயே செய்திருந்தால் செய்திருக்கலாம். வருஷம் ஏற ஏறக் குடும்ப பாரமும் ஏறிக்கொண்டே வருகிறது. கலியாணம் செய்து கொள்ளாத முன்பு இருக்கிற தைரியம் பின்னால் வருகிறதில்லை. பிறகு குழந்தைகள் வேறு பிறந்து விடுகின்றன. கவலையும் பொறுப்பும் பயங்கரமாகக் காட்சியளிக்கின்றன. மேலும் வாத்தியார் வேலையை

நான்கைந்து வருஷம் செய்த பிறகு முன்பிருந்த துணிச்சலும் மறைந்துவிடுகிறது. கையிலே கொஞ்சம் காசு மீதியானாலும் அதன் மூலம் துணிவுண்டாகும். மாதச் சம்பளம் அந்த மாதத்திற்கே தொட்டுக்கொள் துடைத்துக்கொள் என்றிருந்தால் எப்படி மீதம் செய்வது? முருகேசனுக்கு ஒரு இருநூறு ரூபாய்தான் தேவை. அந்தத் தொகை கிடைத்தால் அவனுடைய கனவு பலிதமாய்விடும். அவனுக்கு வாழ்க்கையில் ஒரே ஆசைதானுண்டு. அதாவது, ஒரு சின்னப் பெட்டிக் கடை வைப்பது. வெற்றிலை பாக்கு, பீடி, சிகரெட், மிட்டாய் தினுசுகள், இரண்டு குலை வாழைப் பழம், இன்னும் சில சில்லரைச் சாமான்கள்—இவைகளை அதில் வைத்து வியாபாரம் செய்தால் தினம் குறைந்தது நான்கைந்து ரூபாய் லாபம் கிடைக்கும். சில வாரப் பத்திரிகை, மாதப் பத்திரிகைகளுக்கும் ஏஜன்சி ஏற்பாடும் செய்து கொள்ளலாம். அவற்றின் மூலமும் கொஞ்சம் வரும்படி உண்டாகும். மாதத்திற்கு என்ன இருந்தாலும் நூற்றைம்பது ரூபாயுக்கு மோசமில்லை. வாத்தியாராக இருந்துகொண்டு அத்தனை பணத்தையும் ஒருங்கே கண்ணினால் பார்க்கவும் முடியுமா? பணத்திற்கு மேலே அந்தச் சுதந்திரம் இருக்கிறதே அது ஜில்லா போர்டு உத்தியோகத்தில் கிடைக்குமா? எத்தனை ஜில்லா போர்டு அங்கத்தினர்களுக்குச் சலாம் போடுவது? அந்த ஜூனியர் டிபுடி இன்ஸ்பெக்டர் இருக்கிறாரே—அவரைநினைத்தால்தான் முருகேசனுக்குச் சிம்ம சொப்பனம். அந்த அவஸ்தையிலிருந்து எப்படியாவது விடுபடவேண்டுமென்பதே அவன் பேராவல். ஆனால் அதற்கு ஒரு இருநூறு ரூபாய் வேண்டுமே?

மனைவியின் கையிலே உள்ள தங்க வளையல்களை விற்றால் ஒரு நூறு ரூபாய் கிடைக்கும். சீதனமாக வந்த அவைகளை விற்பதில் ஒரு ஆக்ஷேபமும் இல்லை; மனைவிக்கும் முழுச் சம்மதந்தான். ஆனால், இன்னும் ஒரு நூறுக்கு என்ன செய்வது? பெட்டிக்கடை செய்யவே அந்த ஒரு நூறு பத்தாது. பிறகு சாமான் களுக்கு என்னசெய்வது? அவனை நம்பி யாரும் நூறு ரூபாய் கொடுக்க முன்வரவில்லை. மேலும் முருகேச னுக்குத் தனது நோக்கத்தைப் பிறரிடம் எடுத்துரைக்கத் தைரியம் வரவில்லை. "கையில் இருக்கும் வேலையை விட்டுவிட்டுக் கடை வைக்கப் போகிறான்" என்று சிரிப்பார்கள் என்று பயம். இந்த நிலையிலே அவன் வாத்தியாராகவே காலங்கடத்த வேண்டியதாயிற்று. ஆனால் பல வருஷங்கள் இவ்வாறு சென்றாலும் அவனுடைய ஆசை மறையவேயில்லை. பெண் குழந்தைகள் இரண்டிற்குக் கலியாணம் செய்யக்கூடிய பருவம் வந்துவிட்டது. அதனால் இப்பொழுது எப்படி யாவது ஆரம்பப் பாடசாலைக்குத் தலை முழுகிவிட்டுப் பெட்டிக் கடை வைக்க வேண்டுமென்று அவன் தவித்தான். யுத்த காலத்திலும், அதற்குப் பிறகும் பெட்டிக் கடைகளுக்கு நல்ல வரும்படி. ஆனால், என்ன செய்வது? ஒரு நூறு ரூபாய் கிடைக்கவில்லையே என்று முருகேசன் மனம் நைந்து கிடந்தான்.

அந்தச் சமயத்தில் எதிர்பாராத விதமாக அவனுக்கு ஒரு யோகம் பிறந்தது. அவனிடம் முதல்முதலில் அக்ஷராப்பியாசம் செய்துகொண்ட ஒரு மாணவன் கல்லூரிப் படிப்பை யெல்லாம் முடித்துக்கொண்டு வக்கீலாக அமர்ந்தான். அவன் எடுத்துக்கொண்ட

முதல் வழக்கிலேயே வெற்றியும் கிடைத்தது. நல்ல பீசும் கிடைத்தது. தனது ஆரம்ப ஆசிரியரை நினைத்துக் கொண்டான். என்னவோ அவனுக்கு அவர்மேல் ஒரு விசுவாசம். தான் சம்பாதித்த பணத்தில் ஒரு பகுதியை அவருக்கு அனுப்பினான்.

அதைத் தனது கிழிந்த சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டு முருகேசன் உற்சாகமாக அங்கு வந்து அமர்ந்தான். அவனுடைய கனவு பலிக்கும் தருணம் வந்துவிட்டதாகையால் அவன் குதூகலமாக இருக்கிறான். அவனுக்கு உலகம் அழகாகத் தோன்றியது.

'ஆகா, சூரிய அஸ்தமனம் எவ்வளவு வனப்பாக இருக்கிறது!' என்று மகிழ்ச்சியோடு சொன்னான்.

கமலநாதனுக்கு அப்படித் தோன்றவில்லை. அவன் பெருமூச்சு விட்டான்.

'அதோ பறவைகளைப் பாருங்கள். எவ்வளவு களிப்போடு பேசிக்கொண்டிருக்கின்றன' என்றான் முருகேசன்.

'களிப்போ, விசனமோ நமக்கு எப்படித் தெரியும்? இந்த உலகத்திலே களிப்படைவதற்கு என்ன இருக்கிறது?' என்று பதில் பேசினான் கமலநாதன்.

'நீங்கள் அப்படி நினைக்கப்படாது. உலகமே இன்பந்தான்.'

'கையிலே காசிருந்தால் இன்பந்தான். இல்லாது போனால்?'

'காசு ஒன்றும் நிறைய வேண்டியதே இல்லை. சந்தோஷமாக வாழ்க்கை நடத்துவதற்குக் கொஞ்சம்

பொருளிருந்தால் போதும். ஒரு பெட்டிக் கடை வைப்ப தற்கு ஆஸ்தி இருந்தால் போதும். நன்றாகச் சம்பா திக்கலாம். சந்தோஷமாக இருக்கலாம்.'

'உன்னிடம் நிறையப் பணம் இருக்கிறது போலத் தோன்றுகிறது. அதனால்தான் இவ்வளவு நம்பிக்கை யோடு பேசுகிறாய். என்னிடத்தில் அப்படிப் பணம் இல்லை. இதோ இந்தச் சட்டைப் பையில் உள்ளதைத் தவிர என்னிடம் வேறு ஒன்றும் இல்லை' என்று சட்டைப் பையைத் தொட்டுக் காண்பித்தான் கமல நாதன்.

'என்னிடமும் அப்படித்தான். என் பையிலே உள்ளதைத் தவிர வேறு சல்லிக் காசுகூடக் கிடையாது' என்று முருகேசன் எதிர்வாதாடினான்.

'என்னிடம் உள்ள பணத்தை வைத்துக்கொண்டு நான் ஒன்றுமே செய்ய முடியாது. அது ஒரு காரியத் திற்கும் உதவாது. நான்கு நாட்களுக்குப் பட்டினி யில்லாமல் சாப்பிடலாம். அப்புறம் சாகவேண்டியது தான். நான் எந்த வேலை செய்வதற்கும் லாயக்கற்றவன். மோட்டார் ஓட்ட வேண்டுமானால் தெரியும். ஆனால், நான் யாரிடமாவது டிரைவராகப் போகமுடியுமா? அதுவும் முடியாது. என்னை யாரும் வேலைக்கு வைத்துக்கொள்ள மாட்டார்கள்.' கமலநாதன் எழுந்திருந்து நடக்க ஆரம் பித்தான்.

'நீங்கள் இப்படி அதைரியப் படக்கூடாது. கையி லிருக்கிற முதலை வைத்துக்கொண்டு ஏதாவது தொழில் செய்யுங்கள். எல்லாம் சரிப்பட்டு விடும்' என்று தைரியம் கூறினான் முருகேசன்.

கமலநாதனுக்கு அந்த வாத்தியாரின் பேச்சைக் கேட்டுச் சிரிப்பு வந்தது. 'என்னிடமுள்ள பணத்தின் மதிப்புத் தெரியாமல் நீ இவ்வாறு சொல்லுகிறாய். என்னிடமிருப்பது இவ்வளவுதானென்று தெரிந்தால் பிறகு பேசமாட்டாய். உன்னிடம் ரொம்ப இருக்கும்; அதனால்தான் உனக்கு இத்தனை தைரியம்.'

'என்னிடம் அதிகமாக ஒன்றுமில்லை. இருந்தாலும் அது போதும் எனக்கு.'

இதைக் கேட்டதும் அவனிடமுள்ள தொகை எவ்வளவு என்று தெரிந்துகொள்ள வேண்டுமென்று கமலநாதனுக்கு ஆசையுண்டாயிற்று. 'நான் என்னிடமுள்ள பணத்தைக் காண்பிக்கிறேன். நீ உன்னிடமுள்ளதைக் காண்பி பார்க்கலாம்.'

'சரி, அப்படியே பார்ப்போம்' என்றான் முருகேசன்.

இருவரும் ஒரே சமயத்தில் சட்டைப் பைக்குள் கையை விட்டுப் பணத்தை எடுத்து நீட்டினார்கள்.

ஒவ்வொருவர் கையிலும் ஒரு நூறு ரூபாய் நோட்டு இருந்தது!

# சீதன ஆடு

பனை ஓலை வேய்ந்த சிறிய குச்சு வீடு. திண்ணை யில்லை. தரையோடு ஒட்டிய தாழ்வாரம் உண்டு. அதிலே மேற்கு மூலையில் அடுப்பு, அரிவாள்மனை, ஓலைப் பிரி, கரித்துணி, இரண்டு மூன்று சட்டி பானைகள், சுள்ளிக் குச்சிகள் கிடந்தன. கிழக்கு மூலையிலே வாச லுக்குச் சற்று அருகே ஒரு அம்மியும், அதன் மேலே ஒய்யாரமாக வீற்றிருக்கும் குழவியும் இருந்தன. பக்கத்திலே மூங்கிற் சட்டக் கயிற்றுக் கட்டில். அதிலே ஒரு கிழவன் இருமிக்கொண்டே படுத் திருந்தான்.

தாழ்வாரத்தைச் சேர்ந்தாற்போல இருப்பதுதான் கிழவனுடைய சொத்து சுகங்களைக் கண்ட வீடு. உள்ளே சொத்து ஒன்றும் இன்றைக்குக் கிடையாது. மழை காலத்திலே ஆட்டுக் குட்டியை அதிலே அடைத்து

வைப்பான். அது அவனுடைய சொத்துத்தானே? வேறு உடமை அவனுக்கு என்றுமே இருந்ததில்லை.

வீட்டுக்கு எதிரே கொஞ்சம் திறந்த வெளியுண்டு. கிழவி சாணம் தெளித்துத் தெளித்து அது சமனுகி வாசலாக அமைந்திருந்தது. அதிலே இரண்டு வெள்ளாடுகளை முளையடித்துக் கட்டியிருந்தார்கள். பக்கத்திலே ஆட்டுக்குட்டி ஒன்று துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தது.

பெரிய ஆடுகளில் ஒன்று அதன் தாய். மற்றது சினை; இன்னும் இரண்டு மாதங்களில் குட்டி போடும்.

சினை ஆடு இரட்டைக் குட்டிகளாகப் போட வேண்டும் என்பது கிழவனுடைய ஆசை.

"இரட்டைக் குட்டிகளோடு இந்த ஆட்டை மகளுக்குச் சீதனம் கொடுத்து விட்டால் என் ஆசை தீர்ந்து போகும்" என்று கிழவன் அடிக்கடி கூறிக் கொண்டிருந்தான்.

"தினமும் வயிருற மேய்ந்தால்தான் இரட்டைக் குட்டி போடும். வயிறு வற்றிக் கிடந்தால் எப்படிப் போடும்?" என்பாள் கிழவி.

"என்னமோ பார்க்கலாம். என்னுலே ஆனவரையில் மேய்க்கிறேன். எதற்கும் அதிர்ஷ்டம் இருக்க வேணும்" என்று கிழவன் சொல்லுவான்.

கிழவனுக்கு ஒரு வகையான பக்கவாதம். அதனுல் அவனுடைய இடது கால் நேராக வராது. கொஞ்சம் இழுத்தாற்போல் நடப்பான்.

இருந்தாலும் காலையிலிருந்து மாலை வரையிலும் அவனுக்கு ஓயாத நடைதான். பச்சைத் தழைகளைத் தேடி ஆடுகளை ஓட்டிக்கொண்டு போகவேண்டும். உயர்ந்த கொம்புகளிலே உள்ள தழைகளைத் தன் கையிலுள்ள கொக்கியால் இழுத்துப் பறிப்பான். எப்படியாவது ஆடுகள் வயிறார மேயவேண்டும் என்பது அவனுடைய நோக்கம். அதனால் அவன் தன் உடலுக்குக் கொடுக்கும் சிரமத்தை அவன் பொருட்படுத்த மாட்டான்.

உச்சிப் பொழுதுக்குக் கிழவன் ஒரு வேப்பமரத் தடியிலே வந்து சற்று இளைப்பாறுவான். அந்த வேளையில் கிழவி ஒரு மண் கலயத்திலே களி கொண்டு வருவாள். அவசரம் அவசரமாக அதைக் கரைத்துக் கிழவனுக்கு ஊற்றிவிட்டு அவள் தன் வேலையைக் கவனிக்க ஓட வேண்டும். அவள் தினமும் சம்பாதிக்கிற கூலிதான் அந்த இரண்டு கிழ வயிறுகளுக்குக் கஞ்சி வார்க்கிறது. ஆடு மேய்ப்பதோடு கிழவன் வேலை முடிந்தது. இது வரை அவன் வளர்த்த ஆடுகளையும் அவற்றின் குட்டிகளையும் வருஷத்திற்கு இரண்டு மூன்றாக விற்றுக் கிழவனும் கிழவியும் தமக்கு வேண்டிய வேட்டி சேலைகளை வாங்கிக் கொள்ளுவார்கள். கிழவி வயிற்றைக் கவனித்துக் கொண்டாள். கிழவன் மானத்தைக் காப்பாற்றினான்.

தமது ஒரே மகளான வள்ளியாத்தாளைத் தூரன் பாளையம் கந்தப்பனுக்குக் கலியாணம் செய்து கொடுத்த பிறகு இந்தக் கிழத்தம்பதிகளின் வாழ்க்கை இவ்வாறு சில ஆண்டுகள் கழிந்தன.

ஒரு நாள் உச்சி வேளையில் கிழவன் வழக்கம்போல ஆடுகளை வேப்பமரத்து நிழலுக்கு ஓட்டிக் கொண்டு வந்து கிழவியின் வருகைக்காக ஆவலோடு காத்திருந்தான். கிழவி கலயத்தைத் தலையில் வைத்துக்கொண்டு வந்து சேர்ந்தாள். களிமட்டும் வந்தது ; துவையல் இல்லை. கிழவன் முகம் சுருங்கியது.

அவனுக்குப் பச்சைப் புளியங்காய்த் துவையல் ரொம்பப் பிடிக்கும். புளியங் காயையும் பச்சை மிளகாயையும் வைத்து இரண்டு உப்புக்கல்லும் போட்டுத் துவையல் அரைத்து விட்டால் மூன்று நாளைக்கு முன்னே கிண்டிய களியாக இருந்தாலும் கிழவனுக்கு அமுதமாகிவிடும்.

ஆனால், நாள்தோறும் பச்சைப் புளியங்காய் கிடைக்கிறதா ? புளியங்காய் கிடைப்பதாக இருந்தாலும் கிழவிக்கு அதைத் தேடிக் கொண்டு வர நேரம் கிடைக்க வேண்டுமே ?

புளியங்காய்த் துவையல் இல்லாதபோது கிழவன் முணுமுணுத்துக் கொண்டே கூழைக் குடிப்பான். வேப்பமரத்து நிழலிலே கொஞ்சம் வாக்கு வாதமும் நடைபெறும். அதை ஆடுகள்தான் அசை போட்டுக் கொண்டே கேட்டிருக்கும்.

இந்த நாளிலும் அவ்வாறு வாக்குப் போர் நடந்தது. அதன் முடிவிலே கிழவன் அலுத்துப் போய் விட்டான். " இந்தச் சினை ஆடு குட்டிப்போடும் வரையிலுந்தான் என்னாலே கஷ்டப்பட முடியும். அதற்கு மேலே இந்த ஆடுகளோடு திரிய என்னாலாகாது. இப்பவே உயிரைக் கையிலே பிடித்துக் கொண்டு

வள்ளியாத்தாளுக்காக அலேகிறேன்" என்று பெருமூச்சு விட்டான்.

"குட்டி ஆட்டை விற்றுப் போடுங்கள். கட்டிக்கத் துணியே இல்லே. எல்லாம் கந்தலாகப் போச்சு. உங்களுக்கும் வேலே குறையும்" என்று கிழவி யோசனே கூறிஞள்.

"அடுத்த சந்தைக்குத்தான் போக வேணும். நல்ல விலே கிடைத்தால் விற்றுவிட்டுச் சேலே வாங்கி வருகிறேன். அப்புறம் சினே ஆட்டையும் நல்லா மேய்க்கலாம்" என்று கிழவன் தனது மனேவியின் யோசனேயை ஆமோதித்தான்.

"சந்தைக்குப் போக வேண்டியதில்லே. வடக்காலே வீட்டுச் சின்னப்பன் ஆட்டை விலேக்குக் கேட்டான். அவனே நாளேக்கு வரச்சொல்லி இருக்கிறேன்."

இரவு நெடுநேரம் வரையில் கிழவன் இருமிக் கொண்டிருந்தான். அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லே. அவன் படுத்திருந்த கட்டிலுக்குப் பக்கத்திலே ஒரு பழம் பாயை விரித்துப் படுத்திருந்த கிழவிக்கும் தூக்கம் கெட்டுப் போய்விட்டது.

"ரண்டு மிளகு கொண்டு வரட்டுமா ? அதை வாயிலே போட்டு மெல்லுங்கோ—இருமல் நின்று போகும்" என்று கிழவி எழுந்தாள்.

"சின்னப்பன் ஆட்டை என்ன விலேக்குக் கேட்டான் ?" என்று திடீரென்று கிழவன் கேள்வி போட்டான்.

"இருபத்தஞ்சுக்குக் கேட்டான். நான் முப்பது சொன்னேன்."

" இருபத்தஞ்சு வந்தாலும் போதும்; எனக்கு இனிமுடியாது. இந்த இருமல் வந்தால் நடக்கவே முடியறதில்லே. நெஞ்செல்லாம் ஒரே வலி."

கிழவி மிளகு கொண்டு வந்தாள். கிழவன் அதை வாயில் போட்டு மென்று கொண்டே யோசனையி லிருந்தான். "குட்டியாட்டை நாளைக்கு விற்றுவிடலாம். ரண்டு மாசத்திலே சினை ஆட்டையும் மகள் கையிலே பிடித்துக் கொடுத்து விடலாம். அப்புறம் என்பாடு தீர்ந்துபோகும்."—இப்படி நினைத்துக் கொண்டே அவன் கண்ணயர்ந்துவிட்டான். கிழவியும் உறங்கிவிட்டாள். ஆடுகளும் குட்டியும் வாசலிலே படுத்திருந்தன.

விடியற்காலையிலே வாசலுக்குச் சாணம் தெளிக்க எழுந்திருந்த கிழவி சினை ஆட்டைக் காணுமல் சத்தம் போட்டாள்.

"நான்தானே முளையிலே நல்லாக் கட்டிவிட்டு வந்தேன்; இப்போ கயிற்ரேடே அதைக் காணேமே?"

கிழவன் அவசரமாக எழுந்தான். " சும்மா சத்தம் போடாதே. கயிற்ரேடே அவிழ்த்துக்கொண்டு எங் காவது போயிருக்கும்" என்று சமாதானம் கூறிவிட்டு ஆட்டைத் தேடி அவன் நடந்தான்.

கொஞ்ச தூரம் அவன் காலை இழுத்துக்கொண்டு போனுன். எதிரே வள்ளியாத்தாள் அலங்கோலமாக வந்து நின்ருள்.

" அப்பா, உங்கள் மருமகன் பண்ணின வேலையைப் பார்த்தீங்களா? சேராதவர்களோடு சேர்ந்து ராத்திரிக் கள்ளச் சாராயம் காய்ச்சிப் போலீசிலே அகப்பட்டுக் கிட்டாங்கோ" என்று கூறிவிட்டு அவள் புலம்பினுள்.

கிழவனுக்குப் பகிரென்றது. "இப்படி எத்தனை நாளா நடக்குது?" என்று குழறிக் குழறிக் கேட்டான்.

"எப்பவும் கிடையாது. ராத்திரித்தான் முதல் முதல்லே இப்படிச் சேர்ந்திருக்கிறார். குடிவெறியிலே யார் பட்டியிலோ ஆடு ஒன்றைத் திருடி வந்து எல்லோருங்கூடி வறுத்துத் தின்றிருக்கிறார்கள். இப்போ அகப்பட்டுக்கொண்டு மானம் போச்சே என்று கதறுகிறார்கள். வெளியே தலை நீட்ட வெக்கமா யிருக்குதாம்."–இப்படிச் சொல்லிவிட்டு வள்ளியாத்தாள் தந்தைமேல் சாய்ந்து கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

"அழவேண்டாம், வள்ளியாத்தா. இனிமேல் அவங்களுக்கு நல்ல புத்தி வந்துவிடும்."

"சினை ஆடாம் அப்பா. அதை அறுத்தபோது வயிற்றிலே ரண்டு குட்டி இருந்ததாம். அதைப் பார்த்ததும் உங்கள் மருமகனுக்கு சகிக்கவே முடியலையாம். அப்பவே நல்ல புத்தி வந்துவிட்டது. ஆனால் போலீசிலே பிடித்து விட்டார்கள். பத்துப் பதினைந்து அபராதம் போடுவார்களாம். அதுக்கு நான் என்ன செய்யட்டும்?"

"வள்ளியாத்தா, நான் உனக்குப் பணம் கொடுக்கிறேன். விசனப்படாதே. நீ இப்பவே உங்கள் ஊருக்குப் போய் அவருக்கு ஆறுதல் சொல்லு."

"அம்மாளைப் பார்த்துவிட்டுப் போகிறேன்."

"வேண்டாம். அம்மாளுக்கு இந்த விசயம் தெரியப்படாது. நீ இப்பவே தூரன்பாளையம் போ."

வள்ளியாத்தாள் வந்த வழியே திரும்பினாள். குட்டி ஆட்டைச் சின்னப்பன் இருபத்தஞ்சுக்குக் கேட்

டிருக்கிறான். அதை விற்று 15 ரூபாய் வள்ளியாத் தாளுக்கு, 5 ரூபாய் கிழவிக்குப் புடவை வாங்க—இன் னும் அஞ்சு இருக்கிறது. அதைக்கொண்டு ஒரு ஆட்டுக் குட்டி வாங்கிவிட்டால், ரண்டு வருசத்திலே பலன் பட்டுவிடும். நல்லா மேய்ச்சால் ரட்டைக் குட்டியாப் போடும். எப்படியும் மகளுக்குச் சீதனம் கொடுக்காமலா போவேன்? ஆடு திருட்டுப்போன விசயம் வள்ளியாத் தாளுக்குத் தெரியப்படாது. தெரிஞ்சால் ரொம்ப விசனப் படுவாள். மருமகனுக்கும் பெருத்த அவமானம் வரும். ஏதோ குடி வெறியிலே கெட்ட சேர்க்கையால் இப்படிப் பண்ணி விட்டார். நல்ல வேளை; வேறு எங்காவது திருடி உதை பட்டிருந்தால்......கிழவியிடம் எச்சரிக்கை பண்ணிவிடவேணும். அவள் வாய் சும்மா இருக்காது.” இப்படிக் கிழவன் எண்ணமிட்டுக் கொண்டே வீட்டை நோக்கி நடந்தான்.

அவன் உடம்பிலே ஒரு புதிய தெம்பு ஏறிக்கொண் டிருந்தது.



# பெ. தூரன் எழுதிய நூல்கள்

கவிதை

இளந் தமிழா
மின்னல் பூ

சிறுகதை

தங்கச் சங்கிலி
மா விளக்கு
பிள்ளை வரம்
உரிமைப் பெண்
காளிங்கராயன் கொடை

நாடகம்

ஆதி அத்தி
காதலும் கடமையும்
பொன்னியின் தியாகம்
அழகு மயக்கம்
மனக் குகை
சூழ்ச்சி

கட்டுரை

தேன் சிட்டு
பூவின் சிரிப்பு
காட்டு வழிதனிலே

இசைப் பாடல்

இசை மணி மாலை
கீர்த்தனை மஞ்சரி

மனத் தத்துவம்

குழந்தை உள்ளம்
மனம் எனும் மாயக் குரங்கு
பாரம் பரியம்
குழந்தை மனமும் அதன் மலர்ச்சியும்
குமரப் பருவம்
தாழ்வு மனப்பான்மை
அடிமனம்

குழந்தை இலக்கியம்

நிலாப் பாட்டி
ஆனையும் பூனையும்
ஜிம்மி

பிற நூல்கள்

பாரதி தமிழ்
கருவில் வளரும் குழந்தை
பட்டிப் பறவைகள்
காற்றிலே வந்த கவிதை

